ஓம் பரப்பிரம்மனே நம: **80-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநஜலு நாயுடு.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.)



| | | |
|---|---|---|
| கமலம்-6. | சென்னை பிரஜோற்பத்தி௵ ஆடி௴ 1௳ | இதழ்-64. |
| Vol. 6. | 1931-ம் ௵ ஜுலை௴ 14௳ | No. 64. |




பாட்டுவித்தால் பாடுகின்றேன் ; பணிவித்தால்
பணிகின்றேன் ; பதியே ! நின்னைக்
கூட்டுவித்தால் கூடுகின்றேன் ; குழைவித்தால்
குழைகின்றேன் ; குறித்த ஊணை
ஊட்டுவித்தால் உண்கின்றேன் ; உறக்குவித்தால்
உறங்குகின்றேன் ; உறங்காது என்றும்
ஆட்டுவித்தால் ஆடுகின்றேன் ; அந்தோ ! இச்
சிறியனால் ஆவது என்னே !

---

"கடவுள் எங்கு மிருக்கிறார்" என்று சொல்லாத மதஸ்தர்க ளில்லை. ஆயினும், அவர் கைலாசத்திலும், வைகுண்டத்திலும், பர மண்டலத்திலும் இருப்பதாகப் பற்பல மதஸ்தர்கள் கூறுகின்றனர். இந்துக்கள் பகவானொருவர் மட்டுமேயின்றி எல்லா தேவர்களு முண டென்றும் ஒவ்வொருவரையும் வணங்குவது பிழையல்லவென்றும் சொல்கிறார்கள். அந்ய மதஸ்தர்களோ ஒரேதெய்வ முண்டென்று கூறும் ஹிந்துக்கள் இத்தனை தெய்வங்களை வணங்குகிறார்களே யென்று பரிகாஸம் செய்கின்றனர். இதற்கென்ன சமாதானம்? தெய்வம் ஒன்றுதான். ஆயினும் அதைப் பலவிடங்களி லிருப்ப தாகப் பாவித்து நாம் பிரார்த்தனை செய்கிறோம். முடிவில் அந்தப் பிரார்த்தனை ஆதி பரம்பொருளுக்கே சேருகின்றது. கடவுள்

ஒருவரேயாகி அவரது அதிகாரம் பல மூர்த்திகளிடம் விளங்குகின்றது. இம்மூர்த்திகளெல்லாம் தெய்வம் சாந்நித்யமா யிருக்கும் பற்பல இடங்களேயன்றி வேறல்ல. உலகத்தில் இராஜாக்ஞை யென்னும் பதம் வழங்குகிறது. பிரஜைக ளெல்லோரும் அந்த இராஜாக்ஞைக்குப் பயப்படுகிறார்கள். ஆகிலும், ஒருவராவது ராஜாக்ஞையைக் கண்ணாற் கண்டதேயில்லை. அது கருப்போ, சிவப்போ ஒன்றும் தெரியாது. போலீஸ் கான்ஸ்டேபில் முதல் மாஜிஸ்திரேட், செஷன் ஜட்ஜி, ஹைகோர்ட்டு, இந்தியா கவர்ன்மெண்டு, இந்திய செக்ரடரி, பார்லிமெண்டு, அரசர்—ஆகிய எல்லாவிடங்களிலுமிருந்து ராஜாக்ஞை பிறக்கிறது. சொற்ப சம்பளமுள்ள கான்ஸ்டேபில் நம்மைக் கூப்பிட்டால் உடனே போகிறோம். ஏன்? இராஜாக்ஞைக்குப் பயந்து தான். ஹைகோர்ட்டார் ஸம்மன் அனுப்பினால் உடனே போகிறோம். அதுவும் இராஜாக்ஞைக்கு அஞ்சியே. இப்படியாக எல்லா அதிகாரிகளுக்கும் ஒருவித சக்தியை இந்த இராஜாக்ஞையானது கொடுத்துக்கொண்டிருக்கிறது. அதுபோல், சாமான்ய தேவதைகள் முதல் திரிமூர்த்திகள் பரியந்தம் பிரம்மமானது இராஜாக்ஞையைப்போல் வியாபித்துக் கொண்டு அந்தந்த மூர்த்திகட்கு ஒருவித தெய்வத் தன்மையைக் கொடுக்கிறது. ஆகவே, மூர்த்திகள் பலவாயிருப்பினும் அவற்றி லெல்லாம் விளங்குவது பரப்பிரம்மம் ஒன்றேயாம். சாமான்யமான கான்ஸ்டேபிளுக்கு நாம் வணங்கவில்லை; அரசருக்கே அந்த வணக்கத்தை ஸமர்ப்பிக்கின்றோம். அவ்விதமே, இடையில் மூர்த்திகள் நின்றாலும் பரப்பிரம்மத்திற்கே அந்த வணக்கத்தைச் செலுத்துகிறோம். ஒரு அரசன் இறந்து மற்றொரு அரசன் வரினும் இராஜாக்ஞை மட்டும் எப்போதும் அழியாது நிற்கின்றது. அவ்விதமாக, பரப்பிரம்மம் ஒன்றுமட்டுமே இராஜாக்ஞையைப்போல் எக்காலத்திலும் அழியாமல் அருபி யென்றும், ரூபியென்றும் சொல்ல முடியாமல் விளங்கிக் கொண்டிருக்கிறது.

தலைபலவாய்ப் பெயர்பலவா நதிகளெல்லாஞ்
சாகரத்தி லொருநீராந் தன்மைபோலப்
பலபலவாய்ச் சொல்லுநெறி யெல்லாஞ் சொல்லப்
பட்டதொரு பொருளினையாம் பணிதல் செய்வாம்,

ஃ

"ஜென்மவாஸனை செத்தாலும் போகாது" என்ற பழமொழி ஜென்மாந்தரம் உண்டென்பதை நிரூபிக்கின்றது. உலகில் பலர் அங்கஹீனர்களாகவும், தீராத ரோகஸ்தர்களாகவும் பிறக்கின்றனரே. இங்ஙனம் பிறந்து தவித்தலுக்குக் காரணம்யாது? அவை

---

லாபம்தரத்தக்க வேலையைச் செய்யச் சக்தியுள்ளவனுக்கு இலவசமாகப் போஜன மிடுவது பாபமாகும்.—மகாத்மாஜீ.

பிறவியால் ஏற்பட்ட குறைகளாதலின் அவற்றிற்கு சிசுக்களின் செய்கையே காரணமென்று சொல்வதற்கில்லை. அச்சிசுக்கள் இப் பிறவியில் செய்திருக்கின்றன என்பது உசிதமல்ல. இனி, கர்ப்ப வாஸ காலத்தில் நேர்ந்ததென்பதற்கு மில்லை. இப்பிறவியில் சிசுக் கள் எவ்விதமாகிய கெட்ட செய்கையையும் செய்யாவிடினும், இதற்குமுன் செய்திருக்கவேண்டு மென்று ஏற்படுகிறது. ஆதலின் ஜென்மாந்தரம் உண்டென்று நிச்சயமாகிறது. இந்த ஜன்மத்தில் நன்மையையே செய்கின்றவர்களாயினும், பூர்வ ஜென்மத்தில் பாவம் செய்தவர்க ளாதலால், அதன்பயனாகிய துன்பத்தை இப்போது அனுபவிக்கின்றனர். இந்த ஜென்மத்தில் கெட்ட காரியங்களையே செய்கின்றவர்க ளாயினும், பூர்வ ஜன்மங்களில் நல்வினைகளைச் செய் தவர்களாதலின், அவைகளின் பயனாகிய ஸுகத்தை இந்த ஜன் மத்தில் அனுபவிக்கின்றனர். இவ்விதமே, இந்த ஜன்மத்தில் செய் யும் பெரும் புண்ணியங்களின் பயனை யனுபவிக்க ஸ்வர்க்க லோகத் திற்கும், கடும்பாவங்களின் பயனை யனுபவிக்க நரக லோகத்திற்கும் ஜீவர்கள் செல்லுகின்றனர் என்று சொல்லப்படுகின்றது.

*அத்தமும்வாழ்வு மகத்துமட்டே விழி†யம்பொழுக
மெத்தியமாதரும் வீதிமட்டேவிம்மி விம்மியிரு
கைத்தலமேல்வைத் தழுமைந்தருஞ் சுடுகாடுமட்டே
பற்றித்தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே.

ஃ

"முக்திக்கு மூன்றுவழி" யென்பது பெரியோர் முதுமொழி. அம்மூன்று மார்க்கங்களும் முறையே கர்மம், பக்தி, ஞானம் என் பவை. இவற்றால் இன்பமுண்டாகு மென்பது எவ்வாறெனில், சொல்லுகிறோம். முதலாவது கர்ம மார்க்கத்தைக் கவனிப்போம். கர்மம் என்பது மனோவாக்கு காயங்களாகிய திரிகரணங்களாலும் செய்யக்கூடிய காரியமாம். இது நற்கருமம், தீக்கருமம் என இரண்டு வகைப்படும். தனக்கும் பிறருக்கும் நன்மையை விளைக்கக் கூடிய கர்மத்தையே நாம் செய்யக் கடமைப் பட்டிருக்கிறோம். தீக் கருமத்தைப் புரிவது துக்ககரமாம். நற்கரும மொன்றைச் செய்து முடித்தவுடன் ஒருவித ஆநந்தம் உண்டாகின்றது. இதை ஒவ் வொருவரும் தத்தம் அனுபோகத்தில் நன்றாயறிவர். இவ்வித கரு மத்தை ஸதா செய்துகொண்டிருப்பதால் ஆநந்த விருத்தி யுண் டென்று நிச்சயிக்கலாம். இவ்விதம் கருமம் செய்வதில் ஒன்றைக் கவனிக்கவேண்டும். ஒரு நற்கருமத்தைச் செய்தும் பயன் விளையா விட்டால் மனம் வருத்தமடைகிறது. சுகமுண்டாகா திருப்பதோடு கஷ்டமும் அதிகரிக்கிறது. ஆதலின், பயனைக் கோராது அதாவது பிரயோஜனத்தை விரும்பாது கருமம் புரியவேண்டு மென்று விதிக்

*அத்தம்—பொருள். †அம்பு—நீர்.

கப்பட்டது. இவ்வாறு செய்வதிலும் ஈசுவரப் பிரீதியாகச் செய்தால் மனோத்ஸாகத்துக்கு அளவிராது. இப்படியே ஸத்கருமங்களை நிஷ்காம்யமாகவும் பகவத் பிரீதியாகவும் செய்து வருவோர் எல்லையற்ற ஸந்தோஷத்தை யடைந்து வேறொன்றிலும் மனம் செல்லாமல் பகவானிடமே நினைவுடையவர்களாய் திவ்ய ஞானத்தை யடைந்து முக்தியை எய்துவர். இனி, இரண்டாவதாகிய பக்தி மார்க்கத்தைக் கவனிப்போம்.

ஃ

"பக்தி வலையிற் படுவோன் காண்க" என்றார் மணிவாசகப் பெருமான். பக்தி யென்பது முதலில் ஏதாவதொரு காரியஸித்தியின் பொருட்டு பகவானைப் பிரார்த்திக்கும் வழக்கத்தினால் ஏற்படுகிறது. பிறகு அது பெருகப் பெருக எவ்வித பிரயோஜனத்தையும் இச்சியாமல் பக்தி செய்ய சாத்தியமாகும். தாய் குழந்தையினிடம் அது பிரதியுபகாரம் செய்யு மென்ற எண்ண மில்லாமல் பிரீதி வைப்பதுபோல, பக்தன் பகவானிடம் அவர் நன்மை செய்ய வேண்டுமென்ற கோரிக்கையின்றி, அவரிடத்தில் மோஹித்து அவருக்காகவே செய்யும் பக்திதான் விசேஷமானது. தாதிக்குக் கூலியேயன்றி தாய்க்குக் கூலியில்லை. கூலிக்காரியான செவிலித்தாயின் பிரீதி பெரிதோ? பெற்று வளர்த்த சொந்தத் தாயின் பிரீதி பெரிதோ? அதுபோல, பகவானுடன் அதற்குப் பிரார்த்தனை, இதற்குப் பிரார்த்தனை யென்று வியாபாரம் செய்யாமல் நிஷ்களங்கமான ஹிருதயத்தோடும் அவரிடம் மாறாத பக்தியைக்கொள்வது விசேஷமாம். ஒரு முறை ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியை நோக்கி ஒரு பக்தன், "ஸ்வாமி, உம்மிடம் பலனைக் கோரிச் சிலர் பக்தி செய்கின்றனர்; நாரதாதி மகரிஷிகள் உம்மிடம் ஒரு பைசாவைக்கூட இச்சியாமல் ஸதா பக்தி செய்கின்றனர்; மகரிஷியான நாரதருக்கு இனி உம்மால் ஆகவேண்டிய காரியம் ஒன்றுமில்லை. அப்படி யிருந்தும் அவர் வீணையை மீட்டிக்கொண்டு நாராயண, நாராயண வென்கிறாரே; அதற்கென்ன காரணம்?" என்றான். அதற்குக் கண்ணன், "ஒரு பொருளை விரும்பி என்னிடம் பிரீதி பாராட்டுவோர் என்னுடைய பக்தர்கள்; இதிற் சிறிதும் ஆக்ஷேபமில்லை. எவ்வித பொருளையும் விரும்பாமல் என் ஸ்மரணையைச் செய்து ஆநந்திக்கும் நாரதாதியர் எனக்குப் பக்தர்களல்லர்; நான் அவர்களைப் பூஜிக்கிறேன். அவர்களுக்கும் எனக்கும் வித்யாஸமில்லை; நானே அவர்கள்; அவர்களே நான்" என்றார். இத்தகைய மதிப்பு ஏற்படக்கூடிய பக்தியைச் செய்வோருக்கு வேறு முக்தியும் வேண்டுமோ? பகவானே அவர்களைப் பூஜிக்கும்போது திவ்ய ஞானமும் மோக்ஷமும் கிடைக்கத் தடையேது? ஆகவே, பக்தி மார்க்கமும் முக்திக்கு ஸாதகம் தான். இனி, மூன்றாவதாகிய ஞான மார்க்கதைக் கவனிப்போம்.

ஃ

" ஞானிக்கில்லை இன்பமும் துன்பமும் " என்பர். கல்வியுள்ளவனுக்குக்கிரகிக்கிற ஞானம் ஏற்படும். கல்வி கற்ருேன் அந்த ஞானுனந்தத்தை யடைய முடியாது. ஸங்கீத வித்தையில் ஞானமில்லாதவனுக்கு ஒருவன் பாடுவதைக் கேட்டு ஆநந்த மடையத் தெரியாது. இப்படியே, ஒவ்வொரு சாஸ்திரத்திலும் ஞானமில்லாதவர்களுக்கு அந்த சாஸ்திரத்திலுள்ள இன்பம் தெரியாது. ஆகவே, ஞானத்தாலன்றி வேறு வகையால் இன்பமடைய முடியாதென்று நிச்சயிக்கிருேம். நள்ளிருளில் தனிவழியே செல்லுமொருவன் ஒரு கட்டையைக் கண்டு கள்வனென்று பிரமிக்கிருன். அவனுக்குப் பயம் தோன்றுகிறது. உடனே தற்செயலாய் ஆகாசத்தில் ஒரு மின்னல் உண்டாக, கட்டை யென்றறிந்து பீதியை விட்டொழிக்கின்றுன். இந்த நிச்சயஞான மில்லாவிட்டால் அவனுடைய பயம் நீங்குமா? ஸந்தேகம் தீருமா? பிரயாணம் நிறைவேறுமா? ஆகவே, துக்க நிவர்த்திக்கும், சுகப் பிராப்திக்கும் ஞானமே காரணம். அந்த ஞானத்தை யடையாதவர்கட்கு இவ்வுலகத்திலேயே இன்ப மில்லையெனில் முக்தி எவ்வாறு கிடைக்கும்? உலகம் மாயையின் காரியம்; வீணுய் அதைக்கண்டு அற்ப சுகத்தையும் துக்கத்தையும் கொண்டு கர்மங்களைச் செய்து அவைகட் கேற்றபடி பல சரீரங்களிற் சென்று ஜனன மரண துக்கத்தால் வாதைப்படுகிருேமென்றும், நமக்கு துக்கமேது—சுகமேது—ஜனனமேது—மாணமேது—நாம் ஆத்மா—நாம் அழிவற்ற பொருள்—எங்கும் வியாபித்திருப்பது நம்முடைய ஆத்மாவேயன்றி வேறில்லை—எதைப்பார்த்தாலும் நம்முடைய ஆத்மஸ்வரூபமாகவே யிருக்கிறதென்றும் நிச்சயித்து ஸ்வானுபோகத்தால் பிரம்ம ஞானத்தை யடைந்தவனே ஜீவன் முக்தன். சிறு போது முதல் வேடர்களுடன் திரிந்து காலங்கழித்த அரசகுமாரன் தான் பட்டத்துக்குரியவனென்று பிறர் சொல்லக்கேட்டும், மந்திரிகளை விசாரித்தும், பெற்ருேரால் அங்கீகரிக்கப்பட்டும் நாட்டுக்குள் வந்தால் முன்னிருந்த வேடர் நிலையைச் சொற்பனமாக நினைத்துப் பரமானந்தப்படுவன். அதுபோல், மனிதன் பல பெரியோர்களிடம் வேதார்த்தங்களைக் கேட்டு, தானே சாஸ்திர பரிசீலனைசெய்து, ஆத்ம விசாரணை பண்ணி, தான் முக்தனென்று நிச்சயித்து ஸகல இன்ப துன்பங்களையும் விட்டு பிரம்மாநந்தமடைகிருன். இந்த முக்தியானது ஞானம் ஒன்றினுலேதான் கிடைக்கு மென்பது சந்தேகமற்ற விஷயம். ஆகவே, முக்திக்கு கர்மம், பக்தி ஞானம்—என்ற மூன்றுவழி யுண்டென்று பெரியோர்கள் கூறினர்.

☙

**பகவத் பிரார்த்தனை**:—சங்கற்ப மாத்திரத்தாலேயே அகிலாண்டங்களையும் படைத்துக் காத்து அழித்து, நித்தியாநந்த ஸ்வரூபனுய் எங்கும் நிறைந்திருக்கிற ஆச்ரிதஜன வாச்சல்லியனுகிய ஓ பரம புருஷனே! உன்னை ஆவலுடன் மனனம் செய்வோமாக.

ஓ! சர்வ ஜீவ தயர்பர மூர்த்தி! சகல தேசங்களிலுமுள்ள சேதன கோடியும் எந்த திவ்ய ஆத்மஸ்வரூபனைச் சேவித்து பக்த சிரேஷ்டராய் பாவனராக முயல்கின்றனரோ அந்த நிர்விகாரனுன சர்வாந்தர்யாமி நீயே யாகையால் நின்னை எமது மனதில் எப்போதுஞ் சிந்திப்போமாக.

ஓ! அருள்வள்ளலே! எம்மைப் பிரேமையுடன் எடுத்து வளர்த்த பிதாவாயும், அன்புடன் அணைத்துக்காத்த அன்னையாயும், துன்பந் துடைத்து உதவிய எமது நண்பரான சகல ஸுஜனங்களாயும், சர்வமுமாயும், சர்வத்திலும் ஒட்டியும் ஒட்டாதவன் போலுமிருக்கிற ஓ! மகாத்மனே! ஸஞ்சல சித்தராயிருக்கிற புல்லறிவாளராகிய அடியாருக்கு நின்னருளாலன்றி வேறெந்த வழியால் நினது அன்பு உறுதிப்படும்?

ஓ! சரணுகதபோஷகா அவிவேக மென்னும் மேகத்தால் மறைக்கப்பட்டு, எவ்வழிகளிலும் துக்கங்கள் சூழ்ந்த உலகமாயா மார்க்கத்தினின்றும் எம்மை மீட்பித்து நின் பக்தியாகிய ஸத்கதியிற் செலுத்தி ரக்ஷித்தருள்வாயாக. ஓம் தத்ஸத்

## நம்பி ஏமாறிப் போனவனின் நெஞ்சு.

பயங்கரமாய்த் தான் ஏமாற்றப் பட்டதை வெகு காலத்திற்குப் பிறகு அறிகிறவன், அதுவரையில் வெகு நம்பிக்கையாகத்தான் எண்ணியவர்களே தனக்குப் பெரிய துரோகம் செய் திருப்பதை நினைக்கும்போது அத்துடன் அவர்கள்மீது வைத்த பாசமும் சீ என்று விட்டுப்போகிறது. தீய தன்மையோன் தன் ஏமாற்றத்துக்குப் பழிக்குப் பழி வாங்குகிறுன். சாந்தஸ்தனே கடவுளிடம் அத்துரோக சிந்தையினரைப் பற்றிச் சொல்லிவிட்டு உள்ளம் ஆறுகிறுன். என்ன ஆறினுலும் தான் ஏமாறிய பயங்கரத்தை நினைக்கும் போதெல்லாம் குபீர் குபீர் என்று ஆத்திரம் பொங்காமலிருப்பதில்லை. ஆ! கடவுளே! நம்பி மோசம்போனேனே! அந்தசமயம் இன்னெருவரை ஒருயோசனை கேட்காமற் போனேனே என்று கதறுகிறுன்! தெய்வத்திற்கு இந்த ஏழையின் கதறுதல் எட்டாமலில்லை. இவன்தான் மோசம் போனதை அறிவதற்கு முன்னரே, கடவுள் அதை அறிந்தவராகி, மோசம் செய்த பாவிகளுக்கு அவர்களின் மோச எண்ணம் முடிவில் சந்தோஷத்திற் கிடமில்லாதபடி செய்து சோதனை காட்டி விடுகிறுர்.

அமிர்தகுணபோதினி

பிரஜோற்பத்தி௵ ஆடி௴ 1௨

## ஞால வாழ்வில் நமது தந்திரம்.



ஆளுந்திறன் தந்திரத்தால் அமைகிறது. ஆபத்து நேர்ந்த காலத்தில் அதினின்றும் நம்மை விடுவித்துக் கொள்ளத் துணை உதவுவது எது?—அதுவும் தந்திரமே. ஒருவன் உலகின்கண் அவன் விரும்புவனவற்றி லெல்லாம் வெற்றி கொள்வதற்கும், முன்னுக்கு வந்து சிறந்து விளங்குவதற்கும் தந்திரமே பிரதானமாயிருக்கின்றது. ஒருவருக்கு ஒரு வார்த்தை சொல்லுகையிலுங்கூட, தான் எதிலும் சிக்கிக்கொள்ளாதிருக்கவும், எவருடைய கோபத்துக்கும் ஆளாகாதிருக்கவும், தந்திரமான வழியில் தான் நமது பதிலைத் தர வேண்டியிருக்கிறது. ஒரு வியாபார விஷயத்தில் நாம் ஒரு பொருளைக் கொண்ட விலையை மறைத்து, விற்கும் விலையைச் சொல்வதிலும் தந்திரமாகவே நடக்கவேண்டி வருகிறது. வித்தையைக் கற்பிப்பதிலுங்கூட சில தந்திரமான வழிகளை யனுசரித்தால் தான் சுலபமான விதத்தில் போதிக்க முடிகிறது. பக்தியூட்டும் வழியிலும் வெளிக்குத் திரையிட்டு, உள்ளுக்குப் பகவானுக்கு அலங்காரம் செய்து பிறகு திரை யெடுத்தலாகிய தந்திரங்களை யனுஷ்டித்தே சாமான்யர்களின் ஹிருதயத்தைப் பக்தி வழியிற் பரவசப்படுத்துகின்றனர். தந்திர மென்பது உலக வாழ்வில் பதார்த்தங்களுக்குத் தேவையான உப்பு—சர்க்கரை போல் ஒரு முக்கியமான அவசியப்பட்ட வஸ்துவாயிருக்கின்றது. இவ்வித தந்திரமானது இயற்கையில் அமையப் பெறுவதே தனிச்சிறப்பாகும். இயற்கையில் பொருந்தாதார்க்கு அவ்வளவு சுலபத்தில் தந்திரமான வழியில் நடக்க சாத்தியமாகிறதில்லை. எனினும், விடாமுயற்சியின் துணை கொண்டு உலக காரியங்களை நுட்பமாய்க் கவனித்துப் பயின்று தம்மை அபிவிர்த்தி செய்து கொள்வோருக்குத் தந்திரத்தின் சக்தி சுலபத்தில் அமைந்து விடுதல் கூடும். இராஜ தந்திரம், யுத்த தந்திரம், வியாபார தந்திரம், லௌகிக தந்திரம்—இவை போன்றன வெல்

---

தந்தை இறந்ததும் மீசையைச் சிறைப்பது வழக்கம். அதுபோல் நாயகியை இழந்தவனுக்கும் அதற்கு அடையாளமாகத் தலையைச் சிறைத்துக் காந்தி குல்லா இடும் வழக்கம் ஏற்பட்டால் நலம் என்கிறாள் ஓர் நங்கை.

லாம் சாமான்யமான அறிவினால் வரப் பெறுவனவல்ல அந்தந்த தந்திரங்களுக்கென்றே சிலர் பிறப்பெடுத்தவர்களாயு மிருக்கின்றனர். தந்திரத்தைத் துன்மார்க்கத்தில் உபயோகிக்காதிருக்கவும் நாம் தந்திர முடையவர்களாகவேண்டும். "வட்டிக்கு வட்டி" என்பது போலத் தந்திரத்துக்கு மேல் மற்றொரு தந்திரமும் உண்டு. தந்திர மொன்றே ஞால வாழ்வில் நம்மைத் தெளிவுள்ளவர்களாகச் செய்விக்கின்றது.

ஃ

பிறருக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணக் கூடிய ஒரு சந்தர்ப்பம் நமக்குக் கிடைக்குமாயின், அதை நாம் உபயோகித்துக் கொள்ள ஒருபோதும் தவறக் கூடாது. நம்மால் இயன்றவரையில் பிறரை உபசரிக்கக் கற்றுவைப்பதும் ஒரு பெரிய தந்திரமாகும். இவ்விதம் நாம் செய்யும் மரியாதையானது எவ்வித செலவுமின்றிச் செய்யக் கூடியதாயும், அதன் மூலம் மற்றெல்லா நலங்களையும் நாம் விலையின்றிப் பெற்றுக்கொள்ளக் கூடியதாயும் இருக்கின்றது. நாம் ஒருவரை வரவேற்று உபசரித்த ஒரு பக்குவத்தினால் அவர் நம்மிடத்தில் மிக்க மதிப்புடையவராகி நாம் காட்டிய அன்புக்கு அவர் அடிமையாகவும் ஆகி விடுகிறார். இதன் மூலமாக அவரால் நமக்குப் பல சமயங்களிலும் அரும்பெரும் உதவிகள் சித்திக்கின்றன. உண்மையாகவே, எத்துணைப் பணம் கொடுப்பினும் கொள்ளற்கரிய பலவற்றையும் மரியாதையாற் கொள்ளலாம். ஆகையால், நாம் சந்திக்கும் ஒவ்வொருவரையும் வசியஞ் செய்ய வேண்டும். அவர்களின் தயவைச் சம்பாதித்தால் ஸகல மனிதர்களுடைய ஹிருதயங்களும் பொக்கிஷங்களும் நமக்குச் சொந்தமாகின்றன.

ஃ

பலம் என்பது சில சமயங்களில் முரட்டுத்தனத்திலும் பாயும். பலத்தை உபயோகித்தும் சில காரியங்கள் முடியாமற் போகலாம். அதே காரியத்தைப் பலஹீனனான ஒருவன் தந்திரத்தால் பெரும்பான்மையும் வெற்றி கொண்டு விடுகிறான். பலத்திலும் தந்திரம் மேன்மைப்பட்ட பொருளாகின்றது. வேண்டுவன பெறுவதிற் கத்தி முனையாற் கட்டாயஞ் செய்வதினும் புன்னகையாலிணக்குவதே மேன்மை. தேக பலமில்லாமலே மனோபலத்தால் எவ்வளவோ அரிய காரியங்களை அநேகர் சாதித்திருக்கிறார்கள். மனோபலத்திற்கு அறிவின் பலம் துணை. அறிவின் பலத்திற்குத் தந்திரமே சகாயமாவதாம்.

ஃ

நாம் எவரெவர்களிடம் பழகுகின்றோமோ அவர்களெல்லாம் நம்மிடம் நம்பிக்கை கொண்டு நன்கு மதிக்கும்படியாக நமது செயல்

---

கட்டுப்பாடு என்ற அணை இல்லாவிட்டால் ஒழுங்கீனம் என்ற வெள்ளமானது எல்லாவற்றையும் அடித்துக் கொண்டு போய்விடும்.—மகாத்மாஜீ.

கள் இருக்கவேண்டும். அவர்கள் நம்மீது கொள்ளும் நம்பிக்கைக்கு நாம் பாத்திரமுள்ளவர்களாக முயல வேண்டும். நமது வீட்டுக்கு வந்த ஒருவர் நம்மிடம் ஒரு பணப்பையைக் கொடுத்து பத்திரமாக வைக்கும்படி கூறினல், நமது பொருளைவிட அதிகக் கவலையுடன் காத்து அவர் கேட்கும் வேளையில் திருப்பிக் கொடுக்கவும் சித்தமா யிருக்கவேண்டும். இவ்விதம் ஒருவர் நம்மிடம் நம்பிக்கை கொள்ள வும், அந்த நம்பிக்கைக்கு நாம் தகுதியுள்ளவர்களாகவும் வேண்டும். ஒரு பத்து ரூபாய் ஒருவனுக்குக் கொடுத்தவன் அதற்கு ஒரு ரசீதைப் பெறுகிருன். அவனே நம்பிக்கையுள்ள இடத்தில் எவ்வித ஆதரவுமின்றி நூற்றுக்கணக்கான தொகைகளைத் தருகிருன். ஒருவன் பெற்றுள்ள திறமையைவிட, அவன் கொண்டுள்ள யோக்கியதையே அவனைப் பலரும் மதிப்பதற்கும், அதனல் அவன் செல்வாக்கு பெறுவதற்கும் காரணமாயிருக்கிறது. யோக்கியத்தைக் காக்கும் வழியில் தந்திரத்தை உபயோகிப்பதேன்பது விவேகமாக நடப்பதேன்பதே அதன் போருள். ஃ

"ஆம், ஆம்" என்று சொல்லிக் கொண்டே தலையசைப்பது எவருக்கும் சுலபமே. ஒருவன் செய்யுங் காரியம் அக்கிரமமென்று தனக்குத்தெரிந்தபோதிலுங்கூட, அந்த அக்கிரம காரியத்தை நியாயமென்றே அவன் சாதிக்கும் பொழுது, அதற்கு மறுத்துக் கூருமல் "ஆம், ஆம்" என்றே தலையசைத்து விடுவோரும் உண்டு. இது கேடுகெட்ட சுயநல தந்திரிகளது இழிந்த செய்கையாகும். ஒரு அக்கிரமத்தை நியாயமென்று ஒருவன் கூறுகையில் "அல்ல" என்று மறுப்பதே தைரியமான தந்திரமாகும். இவ்விதம் மறுப்பது வருத்தமான காரியமாகவும் இருக்கலாம். எனினும் துணிய வேண்டியதே. இவ்விதமே—"இல்லை—முடியாது" என்று ஒரு விஷயத்திற் சொல்லப் பின்னடைந்துபோய் அதனல் அநேகர் அதோகதி யடைந்திருக்கிருர்கள். ஒருவன் தான் வாங்கும் கடனுக்கு ஜாமீன் கையெழுத்து இடும்படி அழைக்கிருன். அந்த சமயம் "இல்லை—முடியாது" என்று சொல்லப் பின்வாங்கினல், அதனல் நேரும் தீமைகளுக்கும் பிறகு உண்டாகும் குடும்ப சொத்து நஷ்டங்களுக்கும் அளவுண்டோ? "முடியாது" என மறுப்பதைக்கூடப் புன்னகையோடும் சாந்தமாய்த் தெரிவிப்பதும் ஒரு வித தந்திரத்தில் சேர்ந்ததே.

ஃ

ஒரு சங்கதியில் நம்முடன் சேர்ந்துகொண்டு குலாவுவோர், அவ்விதம் நம்முடன் அன்னியோன்னியமா யிருப்பதில் ஒரு தனி

---

ஸ்திரீகளென்ற பெயர் வெகு மரியாதையைத் தாக் கூடியது. அத்தகையை ரூபத்தைப் பெற்ற அங்கனைகள் அறியாமையால் நிர்த்தோஷிகளைத் தூஷித்துத் தங்கள் பாபத்தை விருத்தி செய்து கொள்வது மதிஹீனமல்லவா?

யான ஆநந்த மிருக்கிறதென்று அவர்கள் உணரும்படியாகவும், நம்மை முழு மனதுடனும் பிரீதித்து அடிக்கடி வந்து காண விருப்பம் கொள்ளும்படியாகவும் அதற்கேற்ற தந்திரமான வழியில் நாம் நடந்து கொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் தம்மைப் பிறர் அன்புடன் உபசரிக்க வேண்டுமென்று விரும்புவதே ஸர்வ சாதாரணம். அவ்வாறு நாம் உபசரிப்பதில் காட்டும் முகமலர்ச்சியினல் பணம் கொடுத்துச் செய்து கொள்ள வேண்டிய பல காரியங்களைப் பணம் செலவிடாமலே செய்து கொள்ளவும் கூடியவர்களாகிருேம். பணம் கொடுத்து ஒருவனை உதவிக்கு நியமிப்பது வழக்கம். இந்த உபசார முகமலர்ச்சியோ பணச் செலவின்றியே பலரை நமது காரியத்திற்கு சகாயமாயிருக்கச் செய்விக்கும் வல்லமை யுடையது. அநேகருக்கு அவர்களுடைய உயர்ந்த திறமையைவிட, அவர்கள் கொண்டுள்ள உபசார குணத்தாலேயே வெளிப்படையான மேன்மை கிடைத்திருக்கிறது. ஒரு காரியத்தை நமக்குப் பிறர் செய்து கொடுப்பதற்கு நாம் அவரை எவ்வளவுக்கு ஸந்தோஷப்படுத்துகிருேமோ, அந்த ஸந்தோஷமே அப்போதே பாதி வேலையைச் செய்து முடித்து விடுவதற்குத் துணிவு கொடுப்பதாகி அவரை ஊக்கப்படுத்தி இசைய வைத்துவிடுகிறது. மேலும், பிறருக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும் சக்தி நம்மிடத்திலிருப்பதே நம்மைக் களிப்பிக்கின்றது. இந்தத் தந்திரோபாயத்தை நாம் இளமையிலேயே கற்றுக் கொள்ள வேண்டும்.

ஃ

எதிலும் ஜாக்கிரதையும் நிதானமும் வேண்டும். “யோசித்துச் சொல்லுகிறேன்” என்பதும், “வீட்டில் கேட்டுச் சொல்லுகிறேன்” என்பதும் தந்திரமான வார்த்தைகள். இது பிறர் மனதில் நம்பிக்கையை உண்டாக்கி விடாதிருக்கச் செய்வதுடன், பிறகு தன்னல் முடியாதபோது மனஸ்தாபத்தை யுண்டு பண்ணிக் கொள்ளாதிருக்கவும் செய்யும். ஆனல், அன்புள்ள ஹிருதயமும் வேண்டும். அந்த அன்புள்ள ஹிருதயத்தைப் போல அமைதியுள்ள மூளையும் வேண்டும். நமக்கு ஆபத்தும் சங்கடமுமாயுள்ள வேளைகளில் நாம் பிறரிடத்தில் நடந்து கொள்ளும் அன்பும், அமைதியுள்ள மூளையுடன் நிதானிக்கும் தன்மையும் நமக்கு நல்ல துணை செய்வதாக இருக்கும். நமது இஷ்டத்திற்கு விரோதமாய் ஒருவர் மறுக்கையில் அதற்காக அவரை எதிர்த்துக் கொள்ளாதிருக்க நமது அமைதியுள்ள மூளை உதவுகிறது. நமது காரியத்தை மறுத்தவரையே மறுபடியும் செய்ய வைக்கும்படி நாம் அவரிடத்து நடந்து கொள்ளும் அன்பு அவரைத் தூண்டிக் கொடுக்கின்றது.

ஃ

நம்மிலும் விவேகத்திலோ சமர்த்திலோ குறைந்தவர்களை நாம் காணும்போது அவர்களை அவமதிக்க நமக்கு ஒரு சிலாக்கினை

யும் உறுதியாக ஏற்பட்டிருக்கவில்லை. எத்தனையோ விஷயங்களில் நம்முடைய யோசனைகள் ஒழுங்குபடாமல் பலகாலும் சிந்தித்துத் தீர்மானிக்க வேண்டிய தாமத குணத்தையே நாம் பெற்றிருக்கிறோம். ஆனால், அதை வெளியிட்டுக் கொள்ளாததே நாம் செய்யும் தந்திரம். புஸ்தகத்தை வாசிப்பதற்கு நமது கல்வி துணை புரிவது போல, ஒருவருடைய குணத்தைக் கிரகிப்பதற்கு நமது கண்கள் பேருதவி செய்கின்றன. ஒருவருடைய கெட்ட குணத்தை அறியும்பொழுது மௌனமாயிருந்து விடுவதே தக்கது. அதற்காக இகழ்வது பகையை விளைவிக்கும். வாய் திறவாமையே மேல்.

ஃ

பிறர் அதிக தயவுள்ளவர்களாகத் தோற்றலாம். அதற்காக, அவர்களை அதிகமாய் நம்பிவிட ஒண்ணாது. எத்தகையோரும் சுய நலத்தோடு தங்கள் காரியத்தையே முதலில் கவனிப்பார்களென்பதை நாம் உணரவேண்டும். புருஷர்களுக்குப் புருஷர்களிடத்திலும், ஸ்திரீகளுக்கு ஸ்திரீகளிடத்திலும் அவர்கள் சந்தித்த முதலிலேயே அன்புதோன்றி விடுவதில்லை. ஆனால், அன்னியனொருவன் நமக்கு அதிகமான நன்மையைச் செய்து விடுவானென்று அவன் பசப்பும் இனியமொழிகளிலும் வாக்குறுதிகளிலும் அதிக நம்பிக்கை வைத்து ஏமாறிப் போவதுண்டு. அந்த அன்னியன் பொய் பேசாதவனாயிருப்பினும்கூட நமது மனம் சந்தோஷப்படுவதற்காக ஒரு சமயம் அளவுக்கு மீறிய ஆசை வார்த்தைகளைச் சொல்லிவிட்டிருக்கலாம். கடைசியாக இன்னொன்று:—அந்த அன்னியனுக்கு நம்மால் ஆகவேண்டிய ஒரு காரிய மிருந்து அதற்காக நமது காரியங்களைச் செய்து கொடுப்பவனாக நடித்திருக்கலாம். எனவே, நடிப்பு மாத்திரத்தினாலேயே ஒருவனை நேசனாகவும், அந்த நடிப்பின் கபடமறியாத யதார்த்தவாதியை ஒரு அல்ப காரணத்தினால் பகைவனாகவும் எண்ணிவிடக் கூடாது. பிறர் தந்திரவாதியாயின் நமது தந்திரத்தினால் அவர்களின் சூழ்ச்சிக்குள் சிக்காமல் தப்பித்துக் கொள்ள வேண்டும்

ஃ

நாம் எவ்வளவுக்கு அறிவின் வழியில் செல்லுகிறோமோ, அவ்வளவுக்கு ஒருசமயம் இன்னும் அதிகமாகவே நமது இச்சையின் வழியில் போய்விடுகிறோம். நமது இச்சைகள் நல்வழியிலேயே செல்லவும் நாம் தந்திரமாய் துர் இச்சைகளை அடக்கியாளப் பழக வேண்டும்

ஃ

"உங்கள் வீட்டில்" என்று பிரித்துச் சொல்வதைவிட, "நமது வீட்டில்" என்று இருவரையும் சேர்த்துச் சொல்வதில் அதிக நன்மை இருக்கிறது. விவகாரமான வார்த்தை விரோதத்தையும் விபரீதத்தையும் விளைத்து விகாரப்படுத்தும். ஒரு விவகாரத்தில் நாம் ஜெயித்து விட்டதாக சந்தோஷிக்கிறோம். ஆனால், அதற்கு

முன் நம்முடன் கூட்டுறவாயிருந்த ஒரு நண்பனை அந்த விவகாரத்தின் பலனாக இழந்து விடுகிறோம். தோல்வி யடைந்தோமென்று உணர்ந்தோரெல்லோரும் வெற்றி யடைந்த கட்சியில் நியாய மிருப்பதாக உணருவதில்லை. ஆகவே, விவகார விஷயங்களைக் கூடிய மட்டில் சுருக்கமாகவே கூறி, எதிரியின் மனதில் அவன் செய்வது தவறு என்கிற எண்ணத்தை நாம் உண்டாக்கி விட்டால் அதுவே நமக்குப் போதும். இதிலும் நமக்கு லௌகீக தந்திரம் பெரிதும் வேண்டும்.

ஃ

ஸம்பாஷணையும் ஒரு அருமையான வித்தையே. பேசுவதற்கு அதிகமான சரக்குள்ளவர்கள் வெட்டிப் பேச்சுகளில் நுழைந்து விடவும் கூடும். சொற்பமான பேச்சுகளாலேயே வந்த காரியம் முடிகிறது. அதிலும், நமது நல்லெண்ணம் பிறருக்குத் தெரியவேண்டும். நமது மனத்திலுதிக்கும் எண்ணங்களையோ, நமது அபிப்பிராயங்களையோ பக்குவமாய் அடக்கி, நம்முடன் ஸம்பாஷிப்போருடைய அபிப்பிராயத்துக்கு இசைந்து தழுவி மனமொத்துச் செல்வதில் தான் நமது வெற்றி யிருக்கிறது. நாம் அன்புள்ளோராகவும், பிறரது கருத்துக்கு இசைந்து செல்லத்தக்கோராகவும் இருப்பின் பலரும் நமது ஸகவாசத்தை விரும்புதல் கூடும். பலருக்கு வருத்தமான காலங்களில் நாம் தேறுதல்பேசி நம்மாலான சகாயம் செய்திருக்கிறோமென்று நமக்குள் ஒரு திருப்திபடவும் முடியும்.

ஃ

குளிர்ந்த மறுமொழியானது கோபத்தை மாற்றி விடுகிறதென்பதை நாம் மறக்கக் கூடாது. கோபமான மொழிகூட இகழ்ச்சியைப்போல் அவ்வளவு மூடத்தனமுள்ளதன்று. பத்து பேரில் ஒன்பது பேர் அடித்தாலும் பொறுத்துக் கொள்வார்; ஆனால் இகழ்ச்சியை மட்டும் எவரும் பொறார். கேலிக்காக ஒரு இஷ்டனை இழப்பது மூடத்தனம். நமக்கு நாமே அனாவசியமாய்ப் பகைவர்களை உண்டாக்கிக் கொள்வதிலும் கெட்ட காரியம் வேறில்லை. நம்மை எவராவது உண்மையிற்பரிகசித்தால் அத்தருணத்தில் கோபம் கொள்ளாதிருக்க முயற்சிப்பதே பெரிய தந்திரம். கூடுமானால் நாம் அவர்களோடு சேர்ந்து அந்த சமயம் உரக்கச் சிரித்து விடுவோமானால், நம்மைக் கேவலப்படுத்த எண்ணியவர்களுடைய செய்கை பயனற்றதாகிவிடும். அவர்கள் நாணுமாறு நம்மையே நாம் தாழ்த்திக் கொள்ளுகையில் நம்மை எவரும் தாழ்த்த முன்வரார்.

ஃ

எப்பொழுதும் நமது அபிப்பிராயங்களில் உறுதி வேண்டும். நமது அபிப்பிராயத்தை ஸ்திரப்படுத்த நமக்குத் தைரியமும் வேண்டும். அதைப் பொறுத்தே நமது மதிப்பு மிருக்கும். பிறர் நிந்தனை

யை நாம் பொருட்படுத்தக் கூடாது. நமது மனதில் தோன்றியதை அப்படியே சொல்வதில் கெடுதியில்லை. ஆனால், இல்லாததை உள்ள தாகக் கற்பனை செய்யக் கூடாது. நமது யோக்கியத்திலும், கடமை யிலும் நாம் அடக்க முடையோராக வேண்டும். ஒருவன் மூட னென்று நாம் தெரிந்து கொண்டதை அவன் அறியக் கூடாது. காரணமின்றி அவனுக்கு அதைச் சொல்லவுங் கூடாது. பொதுவில் ஒரு வகுப்பாரை நிந்திப்பது அறிவீனம். ஒரு தேசத்தாரை ஒருங்கே பழிக்கக் கூடாதென்று ஒரு சமயத்தில் பர்க் (Burke) என்பவர் கூறினர். நாலு பேர் மத்தியில் நம்மைக் கழுதைபோல் விழிக்கச் செய்தானே என்பதிலும் மனம் கொதிக்கச் செய்கிற விஷயம் வேறில்லை. மற்றவர்களைக் கோபமூட்டுவதினாலும், பரிகாசம் செய்வதனாலும் நம்முடைய காரியம் பலித்து விடாது. கண்களும் காதுகளும் எல்லோருக்கு முண்டு; ஆனால், நல்ல புத்தி சிலருக்கே உண்டு.

ஃ

நாம் கோபம் கொள்ளக் கூடாது. நமக்குக் கோபம் வரினும் வெளிக்கு அது தெரியக் கூடாது. நம்மை விரும்பாத இடத்தில் நாம் போய் தலை நீட்டக் கூடாது. நாம் எவரை நம்பலாம்—நம்பக் கூடாது—என்பதை நமது அறிவால் தீர்மானிக்க வேண்டும். நமக்கு சந்தேகமுள்ளவனிடத்தில் ஒரு வேலையும் தரக்கூடாது. ஒரு வேலை தந்து விட்ட பிறகு அவனை சந்தேகிக்கக் கூடாது. முழு நம்பிக்கை யும் வைக்கவேண்டும். ஆனால், கண் மூடித்தனமான நம்பிக்கையும் கூடாது. எப்பொழுதும் நமக்கு எச்சரிக்கை வேண்டும். நமது அந் தரங்கத்தை வெளியிட வொண்ணாது. ஒரு ஞானியின் வாய் அவனு டைய ஹிருதயத்திலிருக்கிறது. ஒரு மூடனுடைய ஹிருதயமோ அவன் வாயில் இருந்து கொண்டு கண்டபடி உளறி விடும். பேச்சை வெள்ளிக்குச் சமானமாகவும், மௌனத்தையோ தங்கத்திற்குச்சமான மாகவும் சொல்லலாம். பேசுவதில் நாவின் வேலையைப் பார்க்கிலும் மூளையின் வேலை அதிகமாயிருக்கவேண்டும். பேச்சின் உற்சாகத்தில் வாய்க்கு வந்தபடி பிதற்றிவிட்டு, பிறகு ஏன் அவ்விதம் பேசினே மென்று வருந்தினோர் அநேகராவர். பல தவறான விஷயங்களும் அந்த அதிகப் பேச்சில் கலந்து விடுகின்றன. குறும்புடன் கூடிய அதிகமான பேச்சுகளே பலவித தீங்குகட்கும் விபரீதத்திற்கும் ஏது கரமாகின்றது. ஒரு மூடனால் மௌனம் சாதிக்க முடியாது. அவச ரமாய்ப் பேசுகிறவனைப் பார்க்கிலும் ஒரு மூடனிடத்தில் அதிக நம் பிக்கை கொள்ளலாம். நாம் கூறியதே சரி யென்று முடிவுகட்டக் கூடாது. நாம் அதில் தவறியும் இருக்கலாமே? செவியுங் கண்ணும் சில சமயம் ஏமாறியும் போகலாம்.

ஃ

சமயம் வந்த பொழுது எதையும் தப்பாமல் பிடித்துக் கொள்ளவேண்டும். எதுவும் வருங் காலத்தில் வேண்டாதவர்களுக்கு வேண்டும் காலத்தில் வராது. ஒரு சமயத்தைத் தவறவிட்டால் மறுசமயம் வராமலே போய் விடலாம். மனிதரது காரியங்களில் ஓர் அலைவருகிறது. பெருக்கோடு அதில் கிளம்புகிறவர்கள் அதிர்ஷ்டமென்னும் கரை சேருகிறார்கள். அவ்விதம் செய்யத் தவறுகிறவர்கள் பிறகு ஏங்குவோராகிறார்கள். ஃ

நாம் தவறியும் போகக் கூடும். நாம் தொட்டதெல்லாம் நிச்சயமாய் நிறைவேறி விடுவதில்லை. ஆனால், அதற்காக மிதமிஞ்சிய எச்சரிக்கையுடன், அதைத் தொட்டால் நஷ்டம் வருமோ, இதைத் தொடங்கினால் லாபம் வருமோ என்னவோ என்று பின்னடைந்து கொண்டேயிருந்தால் நம் வாழ்நாளில் நாம் ஒரு காரியமும் செய்ய மாட்டோம். நாம் தவறி விழுந்துதான் அனுபவமடைய வேண்டும். ஒரு காலத்திலும் தவறு செய்யாதவன் ஒன்றுமே செய்திருக்க மாட்டான். ஆகவே, துணிதலும் தந்திரத்தில் சேர்ந்தவையே.

ஃ

கடைசியாக, ஒரு பெரிய விஷயமுண்டு. அது நமது உடைகளைப் பற்றியதே. சரியானபடி உடையணிவதில் அதிக வசீகரமும், காரிய சித்தியும், உலகை மயக்கும் தன்மையும், தன் சக்திக் குறைவை வெளிக்குக் காட்டாது நடிக்க வல்ல திறனும் அடங்கி யிருக்கிறது. ஆயினும் டம்பத்தில் இறங்கக் கூடாது. மிதம் மீறிவிடக் கூடாது. தலைப்பாகையின்றி வெளியேறக் கூடாது. ஆடையினால் ஜனங்கள் எப்படி மதிக்கிறார்களென்பது மிகவும் ஆச்சரியகரமான ஒரு விஷயம். சுத்தமான ஆடைகள் புதிய சுறுசுறுப்பை யளிக்கின்றன. கதர் ஆடைக்கே அதிக மதிப்பு. நாம் பலரைச் சந்திக்கும் பொழுது, அவர்களில் அநேகரை முக்கியமாய்த் தோற்றத்தினாலேயே மதிக்கிறோம். அங்ஙனமே, அநேகர் வெளித் தோற்றத்தைக் கொண்டே நம்மை மதிக்கிறார்கள். நமது உடைகளில் நாம் ஒழுங்கு தப்பியிருந்தால் மற்றக் காரியங்களிலும் அப்படியே கிரமம் தப்பிப் போய்விடவும் கூடும். பாவனையே மனிதர்களில் விசேஷித்த பாகம்; அழகிய வடிவமே அழியாத சிபாரிசுக் கடிதம். உண்டாகிவிட்ட ஒரு நட்பை யோக்கியமும் கல்வியும் உறுதிபடுத்துமாயினும், முதலில் அது ஒரு நட்பைத் தேடித் தாராது.

---

தன் வேலை அவசரம் தனக்கு என்று வீட்டுக்கு வந்த விருந்தினர் சொல்லிக் கொண்டு தன் காரியத்தில் கண்ணாகிறார். அவ்விதமே வீட்டாரும் எங்கள் அவசரம் எங்களுக்கு என்று விருந்து வந்துள்ள சமயம் மற்றோரிடத்து விசேஷத்துக்குப் போய் விடுகிறார்கள். விருந்தினர் ஹோட்டலில் புசிப்பு கொள்கிறார். அங்கே சும்மா சும்மா அல்ல, பணங் கொடுத்தே புசிப்பு!

நமது சிறந்த உடையே நட்பை உண்டாக்கவல்லது. பிறகே யோக்கியமும் கல்வியும் துணை செய்யவரும். எப்பொழுதும் சிறந்த உடைகளுடன் விளங்குவது பெரிய வசீகரிப்புத் தந்திரம்.

ஃ

தந்திரம் என்பது அதிக உத்தமமான வஸ்து. அதனை மோசம், ஏமாற்றுகை, வஞ்சகம், மித மீறிய சுயநலம் இவற்றுடன் சேர்த்து அசுசிபடுத்தி விடலாகாது. தீயகுணங்களுள்ள தந்திரசாலியைவிட ஏதும் தெரியாத பேதையினனான யோக்கியனே மேல். தந்திரத்தை நல்ல வழியில் உபயோகிக்கக்கடவோம். தந்திரத்தைத் தெய்வப் பிரீதியான செயல்களில் வழங்குவோம். தந்திரமென்பது ஒருவித ஒழுங்கே யாகும். நம்மை ஒழுங்காகவும், செவ்வையாகவும், சிறப்பாகவும் இருக்கும்படி செய்வது தந்திரமே. ஞாலவாழ்வினில் நமது தந்திரம் நமக்கு நற்பயனையும், சிறந்த ஒழுக்கங்களையும் போதிக்கும் நல்லாசானாய் நற்கருவியாய் நல்வழியினில் விளங்குவதாக.

---

## என்றும் நானே பெரியோன்!
## என்றும் என்னில் நீ இளையோனே!!

நீ பிறகு ஒருகாலத்தில் அறிவிற் பெரியோனாகிவிடினும் சரி, செல்வம் வாய்ந்து நவநிதியில் உயர்ந்தோனாகிவிடினும் சரி, என்றும் எக்காலத்தும் நான் பெரியோன் என்ற மரியாதையிலேயே நிற்க, நீ என்னில் இளையோன் என்ற பான்மையில் எனக்கு வணங்கி, அந்த வணக்கமுறையில் என்னைக் கௌரவித்துச் செல்லும்படியான தன்மையே எந்தப்பொழுதிலும் ஸ்திரப்பட்டு நிற்கும். நீ ஐசுவரியாதிபதியாய், நான் பரம ஏழையாய் விளங்கிடினுங்கூட, நீ அப்போதும் என்னை உயர்த்தியே வைத்து, நீ எனக்குத் தாழ்ந்து பணிந்து, அதில் நீ ஒரு பெருமையை ஏற்பவனாகவே அமர்வாய். நானும் உன்னை என் இளையோன் என்று ஆசையுடன் அன்பு பொங்கக் கூறி உன் நற்குணத்தைப் புகழவேண்டியவனாகவே இருப்பேன். நாம் முதன்முதல் சந்தித்துக்கொண்டபோது நீ இளையோனாகவும் நான் முதிர்ந்தோனாகவும் காண்பித்துக்கொண்டு ஆரம்பித்த அந்த மரியாதைப்பான்மையே கடைசிவரைக்கும் நம்மிருவருக்கும் இவ்விதமாக அமைந்துபோகிறது. எனக்கு நீ பெரியவனாக எப்போதுமே ஆக முடிகிறதில்லை.

# குற்றம் பேசுதல்.



ஹிந்துக்களுள் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் சுக துக்க காலங்களில் கூடயிருந்து உதவ வேண்டியது அவசியமே. ஒருவர் மரித்தா ரென்பதைக் கேட்டதும் தூரத்தி லிருப்பவர் செலவுகள் செய்துகொண்டு குடும்ப சகிதம் வந்து சேர்ந்து துக்க சமயத்தில் கூட இருக்கிறார்; பிறகு புசிப்பு வேளையில் எந்த உறவினரும் துக்க வீட்டிவில்லாமல் மெதுவாகப் புறப்பட்டுச் சென்று விட்டதையும், தன் குடும்பத்தார் அங்கு காணாமையும்கண்டு, காலக்ஷேப கஷ்டத்தில் உறவினரைப் புசிப்புக்கு அழைக்காமல் இருந்து விடுவதும் இப்பொழுது வழக்கமாகி வருவதால், அதைப்போல இந்தத் துக்க வீட்டினரும் பந்துக்களைப் புசிப்புக்கு அழைக்காமல் தங்களுக்குள் வீட்டுக்குள்ளாகவே நடத்திக் கொள்கிறார்கள் போலுமென்றெண்ணித் தானும் வெளியில் சென்று தனது அதிக களைப்பால் பசி தாளாமல் ஹோட்டலில் புசித்து விடுகிறார். அதற்குப் பிறகு இவரைத் துக்க வீட்டினர் போஜனத்திற்கு அழைக்க, இவர் "நெடுநேரம் காத்திருந்து, உள்ளே பந்துக்கள் எவரும் இல்லாமையினால் உங்கள் வீட்டிற்குள் மட்டும் செய்து கொள்ளுகிறீர்களென் றெண்ணி ஹோட்டலில் புசித்து விட்டே" னென்கிறார். அதற்குத் துக்க வீட்டினர் ஓ! எங்கள் துக்கவீட்டில் புசிக்காமல் அவமதித்து விட்டார் என்று குறைபேசிக் கோபிக்கின்றனர்; புகார் செய்கின்றனர். புசிக்கக் கூடாதென்று விரோதமாய் இவர் நினைக்கவில்லையே? ஒவ்வொருவரும் ஜாடையாக மெதுவாய்த் தத்தம் வீடுகட்குப் போய்விட்டதை யறிந்த பிறகே இவரும் பசியின் மிகுதியால் ஹோட்டலுக்குச் செல்வதானார். உண்மை இவ்விதமிருக்க ஓ! இங்கு புசிக்கவில்லை யென்று வீணே குற்றம் சாட்டுதல் சரியா? எவ்வளவு நியாயமாக நடந்து கொண்டாலுங் கூட, அதிலும் ஒருகுற்றத்தைக் கண்டு பிடித்துப் பழிப்பது சில உறவினர்களின் தீய சுபாவமா யிருக்கிறது. தூரத்திலிருந்துகொண்டு புறப்பட்டு வராமலே மிகவும் விசனிப்பதாகப் பசப்பி ஒரு கார்டு எழுதிவிடுகிறவர் வெகு நல்ல மனிதராய் விடுகிறார். அவருக்கு ஒரு அரையணா கார்ட் மட்டுமே செலவு. அவ்விதமின்றி மனஸ்பூர்வமான அனுதாபத்துடன் தூரத்திலிருந்து குடும்ப சகிதம் புறப்பட்டு வந்தவருக்கோ ஒரு சொட்டு வார்த்தையும், குறைப் பேச்சும், பழிப்புச் சொல்லும் கிடைப்பதுடன், அனாவசிய மனஸ்தாபத்துக்கும் அவர் ஆளாகிறார். உண்மையாக நடப்பவர்களுக்கு இது காலமல்ல போலும்!

இவ்விதமே ஒரு விவாகத்திற்குச் சென்றவருக்கு, அங்கு நடக்கும் சில்லறைச் சச்சரவுகளில் திட்டுகள் கேட்க நேர்கின்றது. அதில் அவர் சம்பந்தப் படாதிருந்தும் அவரையும் சேர்த்தே தூஷிக்கிறார்கள். நிரபராதியாகிய தன்னைத் தூஷிப்பதைத் தாளாமல் அதற்குப் பதிலுக்குப் பதில் வார்த்தை சொல்ல வேண்டியதாகி அதில் மனஸ்தாபங்கள் குறுக்கிடுகின்றன. இந்த மனஸ்தாபம் பின்னுக்குப் பெரியதாய் வளர்ந்து விடுகிறது. இதிலிருந்து சுபாசுப விசே

ஷங்கட்டுக்கூடப் போவது நின்று ஒருவருக் கொருவர் பேச்சு வார்த்தை யும் அற்றுப்போய் கனத்த விரோதம் மூண்டு கொள்கிறது. இது விவாகத் தின் பொருட்டுக் குடும்ப சகிதமாகப் போனதற்குக் கிடைத்த லாபம் போலும்! இவ்விதம் இவர்கள் கெட்ட வர்களாகிவிட, அந்த விவாகத்திற்குச் செல்லாமலே தூர இருந்து கொண்டு அரையணா கார்டு மட்டும், கலியாணம் நன்றாக நடக்கட்டும் என்று எழுதி யனுப்பி விட்டு ஒதுங்கிக்கொண்டவர் கள் மிக்க நல்லவர்களாகி விடுகிறார் கள்! உலகத்தின் விநோதங்கள் இப் படி யெல்லா மிருக்கின்றன. எந்தப் பக்கம் போனாலும் குற்றம் வருகிறது. என் செய்வது? பட்டும் படாமல் போகிறவர்களுக்கே நல்ல பெயர். பக்கத்தி லிருப்பவர்களுக்கோ வசை மொழிகளே லாபம்!—ஸன்மானம்!

ஃ

தன் மனஸாக்ஷியின்படி நியாய மாகவே தான் நடந்து கொண்ட திருப்தி யொன்றே தனக்குப் போது மாயினும், மற்றவர்கள் தன்னைப் பழிப் பதைப்பற்றித் தான் கவனிக்க வேண் டிய அவசிய மில்லாவிடினும், அனாவ சியமாகத் தன் மீது பிறர் சாட்டும் குற்றங்கட்கும், குறைப்பேச்சுகட் கும் வருந்தாம லிருக்கக் கூடவில்லை. மனதில் உண்மையான அன்பு இருந் தால் குற்றம் பேசப் புத்தி போகாது.

## லைப் இன்ஷியூரன்ஸ் எச்சரிக்கை.

பெரிய தலைப்பாகையுடன் வருகிற ஏஜண்டுகளைக் கண்டு மயங்கி விடாதீர்கள். வைத்திய பரிசோதனை யில்லா மலே 60-வயதுள்ள வர்களும் கூடச் சேரலாமென்றும், மாதம் $1\frac{1}{2}$-ரூபாய்ச் செலுத்தி வந்து இறந்தவுடன் 500, 1000-ரூபாய்கள் போல் பெற்று லாபமடையலா மென்றும் சொல்லிக்கொண்டு புறப்பட்டுள்ள நூதன லைப் இன்ஷியூ ரன்ஸ் கம்பெனிகளிடத்தில் எச்சரிக்கையோடும் இருங்கள். $1\frac{1}{2}$-ரூபாய்ச் செலுத்தி 500 ரூபாய் 1000 ரூபாய் எவ்விதம் கிடைக்கும் என்று யோசித்து பாராமல் பேராசைப்பட்டுச் சேர்வதின் ஆபத்து இது. இத்தகைய கம்பெனிகளில் சேர்ந்த சிறிது காலத்துக் குள்ளேயே செத்துப் பரலோகம் சென்றால் அப்போது 500 ரூபாய், 1000—ரூபாய் போல் கிடைக்கலாம் ஆனால் சீக்கிரம் இறக்காமல் இருக்கிறவர்கள் பாடு திண்டாட்ட மானாலும் ஆகிவிடலாம். அதாவது இவர் கள் இறப்பதற்கு முன்னரே இந்த இன்ஷியூரன்ஸ் கம் பெனி இருந்த இறந்த இடம் தெரியாமல் மறைந்து போய் விடலாம்.

உண்மையான நண்பர்கள் நம்வீட்டிற்கு வந்ததும் நம் களைப்பெல்லாம் தீர்ந்து விடுகிறது.




# வசிய மருந்தை எடுக்க வழி.



மனைவி தன் கணவனை வசியப்படுத்திக் கொள்வதற்கென்று மருந்து வைக்கிற விஷயம் இந்நாளிலும் நடக்கிறது. இவ்விதமே குடும்பத்தில் சிற்சிலருக்கு மருந்து வைத்தலும் உண்டு. ஐசுவரிய ஸம்பன்னையான தன் மாமியை வசப்படுத்திக் கொள்ள மருமகன் ஏதோ ஒரு மருந்தை அவளுக்கு மோரில் கலந்து தந்ததாகவும், அதை அருந்திய தினத்திலிருந்து ஜீவகாலம் வரையில் சித்தஸ்வாதீனமற்றுப் பைத்தியம் பிடித்வளாளென்றும் கேட்டிருக்கிறோம். விலை மகளிராலும் மருந்து வைக்கப்படுவதுண்டு. மாற்றாந்தாய் தன் மூத்தாளின் குமாரனுக்கு மருந்து வைத்து அவன் சீக்கிரமே மடிய, சகல சொத்துக்களையும் தன் வசம் செய்து கொண்டதையும் கண்டிருக்கிறோம். இவ்வித மருந்துகள் வசியப்படுத்துவதற்குப் பதிலாக அதை உண்டவர்களை நமனுலகுக்கு அனுப்பி விடுகின்றன.

ஃ

இவ்விதமாய் வைக்கப்பட்ட மருந்தை வெளியில் எடுப்பதற்கு எத்தனையோ பேர் எத்தனையோ விதத்தில் முயலுகின்றனர். பெரும்பாலும் வெற்றி காண்பதைக் காணோம். எத்தனையோ பேருக்குப் பேதிக்குக் கொடுத்தும் பலனில்லை. இதற்கு ஒவ்வோர் அருமையான வேர், மூலிகைகளே ராஜாவாக வேலை செய்கின்றன. இது தெரிந்தவர்கள் தான் கொடுக்க வேண்டும். ஃ

இம்மருந்தை யெடுப்பதற்கு கோலார்பட்டியில் ஒரு பூசாரியிருக்கிறான். இவன் தோற்றத்தில் ஏதோ தெய்வ பூசை செய்கிறவனாகக் காண்கிறான். இவனைத் தேடிச் செல்லுகிறவர்கள் பலர். ஒரு நாளில் பலர் பல ஊர்களிலிருந்து வந்ததை நான் நேரிற் கண்டதிசயித்தேன். இவன் தன்னிடம் வந்தவர்களை உட்கார வைத்துக் கால்களை நீட்டச் சொல்லி வயிற்றைப் பிடித்துப் பிணைகிறான். பிணையும் பொழுதே ஏதோ மந்திரம் சொல்லுகிறான். அது முடிந்ததும் ஒரு வேரைக் கொடுத்து "இதை மென்று எறக்கு; காலு கைகளே ஒதறி வுட்டுப் போ; இன்னேயோடே ஒன் வியாதி போயிடுச்சி" என்கிறான். இவனுக்கு இஷ்டப்பட்ட பணம் கொடுக்கிறார்கள். இரண்டணா ஓரணா கொடுத்தாலும் முகங்கோணாமல் வாங்கிக் கொள்கிறான். நாங்கள் எட்டணா கொடுத்தோம். ஃ

கோலார்பட்டி யென்பது திருச்சி ஜங்கிஷனுக்குத் தென்மேற்கில்

---

அநாதைகளான எத்தனையோ வித ஸ்திரீகள் இந்த நிமிஷத்தில் தங்கள் கண்ணீர்த் துளிகளால் பூமியை நனைக்கிறார்கள். அவர்களின் கஷ்டத்தைக் கவனிக்கும்தயாள ஸம்பன்னர்கள் எங்கேயோ ஒருவர் தான்.

சுமார் 4-மைல் (மதுரை ரோட்) தூரத்திலுள்ள பஞ்சப்பூர் என்னும் சிறு ஊருக்கு நேர்தெற்கிலிருக்கிறது. பஞ்சப்பூரிலிருந்து காட்டு வழியாக ஒரு நாலைந்து மைலேனும் செல்ல வேண்டும். வழியில் மேக்குடி, செங்குருச்சியென்னும் ஊர்கள் குறுக்கிடும். அவற்றைக் கடந்து செல்லவேண்டும். அங்கு வழி கேட்டால் "வவுறு புடிக்கிறவங்க ஆட்டுக்கா?" என்று வினவி கிராமத்தார்கள் வழி சொல்லுவார்கள். காலையில் போக வேண்டும். கையில் சோற்று மூட்டையிருத்தல் அவசியம். அங்கு எதுவும் வாங்க முடியாது.

ஃ

இவனை எல்லோரும் தேடி வருவதிலிருந்தே இவனால் அநேகருக்குக் குணமுண்டு என்பது வெளிப்படை. வயிற்றில் மருந்திருந்தாலும், வெறும் வயிற்று வலியானாலும் சொல்லி விடுகிறான். மருந்திருந்தால் ஒரே முறையில் மலத்துடன் வெளி வந்து விடுகிறது. இது பலர் கண்ட அநுபவம். அறியாமைப் பெண்டீரால் அவதிப்படுவோர் நலமடையும் நல்லெண்ணத்துடன் எனது அநுபவத்தை இந்த அநுபவப்பத்திரிகையில் வரைந்தேன்.

T. S. குழந்தைவேல் முதலியார்

II

ஓர் ஐய வினா.

உலகில், எவரும், எந்த ஸந்தர்ப்பத்திலும், "பசுமரத்தாணி" என்றதை உபயோகித்து, அதைப் போல் பதிந்தது என்று பிரஸ்தாபிக்கிறார்கள் அம்மொழியின் கருத்து யாது?

ந. போ. சுந்தரேசன்.

## ஆங்கில நாவல்களின் மொழி பெயர்ப்பு.

ஆங்கில நாவல்களை மொழி பெயர்த்தோர் தங்களின் எழுத்துப் பிரதியைச் சீக்கிரம் அச்சிட்டு விடவேண்டும். இல்லாவிடில் இவர்களின் மொழி பெயர்ப்பு வெளியாவதன் முன்னம் மற்றொருவர் அதே ஆங்கில நாவலின் மொழி பெயர்ப்பை வெளியிட்டுவிட, முன் எழுதிய விரோதிசைக்க நேருகிறது முன் எழுதியவரும் அதை அச்சிட்டு விட்டால் அந்த இரண்டு நாவல்களையும் விலைகொடுத்துப் பெறுகிற ஜனங்கள் இரண்டும் ஒரே நாவல் என்று தெரிந்து ஏமாறுகிறார்கள். இவ்விதமின்றி தானே சுயமாக யோசித்து நாவல் எழுதியவரோ எத்தனை வருஷங்கள் பெட்டியில் வைத்திருந்தாலும் அதற்குப் போட்டி நாவல் வருவதில்லை. அதைப்போல மற்றொருவர் எழுதவும் முடியாது. ஸ்வயமாய் எழுதுவதற்கும் மொழி பெயர்த் தெழுதுவதற்கும் உள்ள பேதம் இதுவே.

தங்களின் காரியம் ஆகிவிட்ட பிறகு சிலர் வந்த கடிதத்திற்குப் பதில் எழுதுவதே யில்லை.




# பிராசீன-நவீன கால ரமணிகள்.



ஸாமான்யமாய் ஸ்திரீகள் எப்போதும் வேலை செய்துகொண்டே யிருப்பார்கள். ஜலம் கொண்டு வருவது, வீட்டை ஜலத்தால் சுத்திசெய்து அழகிய கோலங்களைப் போடுவது, பூஜை பாத்திரம்—பானுதிகளின் பாத்திரங்களைப் பளபள வென்று தேய்ப்பது, வீட்டின்வாயிற்படியை மங்களகரமாக விளங்கச் செய்வது, எங்கே பார்த்தாலும் நிர்மலமாயும், சுத்தமாயும் தோற்றுவதற்காக கிருகத்தை அடிக்கடி பாதுகாப்பது—இவை முதலிய அநேக வேலைகளை ஆயாஸமின்றி ஆநந்தத்தோடு செய்வார்கள். பிராதக் காலத்தில் நதிக்குச் சென்று ஆசார அனுஷ்டான மந்திரங்களுடன் ஸ்நானம் செய்து, தேவாலயத்திற்குச் சென்று ஈசுவரனை வணங்கி குடும்பப் பிரார்த்தனைகளையும், பதியின் ஜீவ காலத்தை ஸந்தோஷமாய் வைக்க வேண்டிய அம்ஸங்களையும் தியானம் செய்து, நிர்மல தேகத்துடன் கிருகத்திற்கு வந்து சுசியான வஸ்திரம் தரித்து, சாகபாகாதிகளை ருசிகரமாய்ச் செய்து, பெரியோர்கள் செய்யும் பூஜை வேளையில் நைவேத்யமாய்ச் சொண்டுவந்து வைப்பார்கள். வீட்டிலுள்ளவர்கள் ஸமபந்தியாய்ப் போஜனம் செய்யவேண்டி கூடத்தில் இலைகளையும் தீர்த்த பாத்திரங்களையும் அழகாய் வைத்து குடும்பத்தார் வந்தவுடன் வெகு பிரியத்தோடு அவரவர்களின் மனம் மகிழ அன்னம் படைப்பார்கள். எல்லோரையும் ஏகரீதியாய்ப் பாவிக்கும் ஸ்வபாவம் இவர்களிடம் அதிகம். சிடுசிடு, வெடுவெடு, அசூயை, பொறாமை, பேதஞானம் தெரியாத ஆதிகாலத்து மாதர்களின் முகத்தையும், அவர்கள் செய்யும் பாகாதிகளின் ருசியையும் வியாதியஸ்தர்கள் பார்த்தாலும் அவர்களின் நோய் பரிகாரமாகும். கபடமே அறியாத நிர்மல ஸ்வரூபிகளாகப் பிரகாசித்தனர். அன்னோரின் மனோக்ஞமான குணம் ஒருபோதும் மறக்கத் தக்கதல்ல. மஞ்சள் குங்கும மென்றால் அவர்களுக் குண்டாகும் பிரியத்துக்கும் ஸந்தோஷத்துக்கும் அளவில்லை. மஞ்சள் பூசாமலிருந்தால் ஏதோ கஷ்டத்தை யனுபவிப்பவர்கள்போல் துக்கிப்பார்கள். நெற்றியில் திலகம் இல்லாமல் க்ஷண நேரம் கூட இரார். தெருவாசலையும் எட்டிப் பாரார். கிருக கிருத்ய ஸாமான்களை வெகு ஜாக்கிரதையோடும் பத்தி

---

*தங்களின் கஷ்டங்களைக் கவனியாமல் தங்களின் மக்களை எவ்வளவோ உயர்பதவிக்குக் கொண்டுவந்துவிட்டவர்கள்தான் பிற்காலத்தில் தமது மக்களால் கைவிடப்பட்டு வேறிடத்தில் உணவுகொண்டு வாடியலைய நேரிடுகிறது.*

ரப்படுத்துவார்கள் தன் குழந்தை உயர்ந்ததென்றும், மற்றவர் குழந்தை தாழ்ந்ததென்றும் எண்ணார். இத்தகைய உத்தமிகளின் காலம் இப்போது மறையலாயிற்று. எனினும் முற்றிலும் மறைந்து விடவில்லை.

ஃ

நவீனகால ரமணிகள் புதுபுது கௌரவங்களை சிருஷ்டித்து நூதனப் பெருமைகளில் திருஷ்டி வைக்கின்றனர். ஜலமெடுத்து வருவது அந்தஸ்துக்குக் குறைவென்பர். வீட்டைப் பெருக்கி மெழுகுவதற்கும், தெருவில் கோலம் போடுவதற்கும் பரிசாரகிகளை நியமிப்பர். ஸௌந்தராங்கிகளுக்கு மஞ்சள் குங்குமம் அநாகரீகமாயின. ஸோப் உபயோகமே மங்களகரமாய்த் தோன்றுகிறது. இவைபோன்ற நவீன ஆசாரணைகள் பலபல. எல்லோரும் இவ்விதமேயென்று நாம் சொல்ல வரவில்லை. சிலர் நவீன மாறுதல்களை உண்டு பண்ணுகிறார்கள்; மற்றவர்கள் அவற்றைப் பின்பற்ற முயல்கிறார்கள். எத்தனையோ பழைய நகைகள் புது வித ஆபரணங்களாகச் செய்யப்பட்டு, அவைகளும் பிறகுமாறி வேறாகி இன்னும் ஒரு நூதனத்திற்புகக் காத்திருக்கின்றன. காசுமாலைகள் கடியாரகொலுசுகளாயின. காபி பானமே விரத நோன்புகளுக்குக் கௌரவம் கொடுத்து வருகிறது. விரித்துரைக்க மனமில்லாமல் இத்துடன் நிறுத்துகிறோம். முக்கியமாய் ஸ்திரீகள் கவனிக்க வேண்டிய அம்ஸங்கள் அவரவர்களின் மதாசாரத்தைப் பொறுத்தது. தெய்வம் கொடுத்துள்ள அந்தஸ்திலிருந்து ஆநந்த மடைவோர்களே ஸுகிகளாவர். பிராசீன ஆசரணைகளிற் பிரீதிகொண்டு, பதியே தெய்வ மென்று கருதி, பதிபாத ஸேவையே பரம பாக்கிய மென்றெண்ணி, இல்லறத்துக்கேற்ற துணைவிகளாய் ஜ்வலித்து குலாபிவிர்த்தியை நாடி விவேகிகளாய், வித்தியா வந்தைகளாய் விளங்க முயற்சிப்பதே சிரேஷ்டதரமானது.

## இரண்டு நாடகங்கள்.

குழந்தை மிக்க வியாதியாயிருக்கிறதே, வைத்தியரும் கைவிட்டனரே, ஒருதுளி பால்கூட உட்கொள்ளவில்லையே என்று பெற்றோர் கவலையுடன் அதைச் சூழ்ந்து ஏங்கியவாறிருக்க, மற்றோர் பக்கமோ சுகமாக ஓடியாடித் திரியும் குழந்தையை அது செய்த சிறு பிழைக்காக அதன் பெற்றோர் கண்டபடி அடித்துக் கதறவைக்கின்றனர். மிதம் மீறிய ஆத்திரம்கொண்டு இன்னும் அடிப்பதற்கு நெருங்குகின்றனர். இரு பக்கங்களில் இரண்டுவித நாடகங்கள் நிகழ்கின்றன. குழந்தையின் அருமையை உணர்வது அதுவியாதியால்படுத்துக்கொண்டகாலத்தில்தான்போலும்!

சிறு குழந்தைகளா யிருந்தபோது அவர்களை எடுத்து முத்தமிட்டுத் தோளிற் சுமந்து திரிந்தது ஒருகாலம். இப்பொழுது அவர்களையே பகைப்பதும் ஒருகாலம். நமக்கு உட்பட்டவர்கள் நம்மை மிதிப்பதும் ஒரு காலம்.




1. பணம் கொடுக்காமல் நாவல்கள் பத்திரிகைகள் வாங்கி வாசித்து விட்டுத் திருப்பித் தரும்போது அத்தனை சுகமாக இல்லை என்கிறார்கள். இது இரவல் தந்ததற்கு வந்த நற்சாக்ஷி போலும்!

2. ஒருவருடன் சிநேகமாயிருப்பதைவிட சிநேகமில்லாமலிருப்பதில் எவ்வித மனச்சலிப்புமின்றி சமாதானமாயிருக்க வழி கிடைக்கிறது.

சு. ப. சிதம்பரம்.

## II

ஆடம்பரமாக உள்ளவனையும், சாமர்த்தியமாகப் பொய் பேசுபவனையும் ஜனங்கள் சீக்கிரத்தில் நம்புகின்றனர். ஆடம்பரமற்று யதார்த்தத்தையே பேசுகிறவர்களின் வார்த்தைகளையோ மதிப்பாரில்லை.

V. R. இராமநாதன்.

## III

4. வியாசம் எழுத முயலுகையில் விஷயம் கிடைப்பதில்லை. அயலூருக்குச் செல்லும் பொழுதும், பிணியுற்றிருக்கையிலும், சௌகரியமற்ற சமயங்களிலும்தான் அருமையான சிந்தனைக்குறிப்புகள் தோன்றி அவற்றில் பல மறந்தும் விடுகின்றன.

5. ஒரு வித யோசனை ஏற்பட்டு அதை எழுதி முடிப்பதற்குள் மற்றொரு யோசனை தோன்றிக் கொள்கிறது. அதைக் குறித்து வைத்து விட்டு முன் எழுதியவைகளைத் தொடங்குகையில் அதற்குச் சம்பந்தப்பட்டவைகள் மறந்து போகின்றன. மறுபடியும் கஷ்டப்பட்டு அதை எழுதும சமயம் இன்னொரு புதுயோசனை தோன்றுகின்றது. இவ்விதம் மனதில் தோன்றி மறைந்தவைகளுக்குக் கணக்குண்டா? P. R. நாராயணசர்மா.

## IV

6. அவன் ஒரு இளிச்சவாயன் என்று இவன் நினைக்கிறான். அவனோ ஏமாறியவன் போலிருந்து சமயம் பார்த்து இவன் தலைக்கே குல்லா போடுகிறான்.

7. ஒரு முக்கிய விஷயத்திற்கு ஒருவருக்கு எழுதி நமது வேலைகளை நிறுத்திக் கொண்டு பதிலை எதிர்பார்க்கையில் கடிதமே வருவதில்லை, ஒரு சமயம் வந்தாலும், நாம் கோரிக் கேட்டவிஷயம் கடிதத்தில் இருப்பதில்லை.

8. இக்கட்டான சமயத்திற்கு உதவும்படி சில ரூபாய்களைப் பெட்டிக்கு அடியில் வைக்கப் போக, எப்படியோ அனாவசியச் செலவுகள் வந்து ஒவ்வொரு ரூபாயாக முழுதும் ஆகி விடுகிறது. பணம் இல்லாத சமயம் எந்த தண்டச் செலவையும் செய்ய முடியாதபடி சமாளித்துக் கொள்கிற தன்மை பணம் இருக்கும்போது உண்டாவதில்லை. என் செய்ய?

---

ஸ்ரீ விஷ்ணுமூர்த்தி 108-விதமாய்ப் பக்தர்களுக்கு 108 திவ்யதேசங்களில் எழுந்தருளியிருந்து சேவை ஸாதிக்கின்றார் என்பர். மனிதர்களிலும் சிலர் 108-க்கும் மேற்பட்ட விதமாய் மாறி ஒருதாம் ஒன்றுசொல்லி, மற்றோர் தாம் வேறோர் விதமாக நடந்து வேறுபடுகிறார்கள்.

9. ஒருவருக்குக் கடன் கொடுக்கு முன் அவர் ஐவேஜிக்காரரா என்பதைவிட நாணயஸ்தரா என்று விசாரிப்பது முக்கியம். ஐவேஜியுள்ளவர்களுக்குத் தான் பணத்தைத் திருப்பித் தரக் கஷ்டமாயிருக்குமாம்!

வ. சு. நாராயணசாமி செட்டியார்.

[கொச்சையாகவும் பச்சையாகவும், பழமைப்பட்டவைகளாகவும், ஏற்கெனவே வெளிவந்தவைகளாகவுமனுப்புகிறார்கள். அவை பிரசுரிக்கப்படமாட்டா. ஒருவர் அனுப்பியதை வெகு கஷ்டத்துடன் வேறொரு பிரதி நாமே எழுதிப் பிரசுரித்தால், உடனே இன்னும் அநேக பிழைகளுடன் மற்றொன்று எழுதியனுப்பி விடுகிறார்கள் இவற்றைத் திருத்தி வெளியிடுவதை விட நாமே அவ்விஷயத்தை முழுதும் எழுதி விடலாமென்று தோன்றுகிறது. ப—ர்.]

## தான் பிரிந்தாலும் தன் பழகிய நெஞ்சு பிரியவில்லை.

ஒரு காலத்தில் எவ்வளவோ மனமொத்து நேசித்துவிட்டுப்பின் இடையே உண்டான சச்சரவால் பிரிந்து பிரீதியும் குன்றி மனமும் வேறுபட்டு பரஸ்பரம் சந்திக்காமலே தூரத் தூர இருந்து விட்ட போதிலும்கூட, அந்தப் பழகிவிட்ட நெஞ்சம் அந்தப்பழய நேசனை அடிக்கடி நினைத்துக்கொண்டு அவன் நினைவாகவும் வருந்தாமலில்லை பிறகு வீதியில் அந்தப்பழய நண்பனைத் தற்செயலாய்க் கண்டு விடும்போது, அந்த நண்பன் தன்னைக்காணு விடினுங்கூட, தன்னையே அறியாத ஒருபழய ஆவலுடனும் ஓடிப்போய் அவன் கைகளைப் பிடித்துக்கொண்டு விடுகிறது. அவனும் திடுக்கிட்டுப் பழய நண்பனைப் பார்த்து வியப்பும் மகிழ்வும் நிரம்பியவனாய் மிக்க ஆர்வத்துடனும் க்ஷேமம் விசாரிக்கிறான். அவனுக்குச் சிற்றுண்டிகளும் இந்த நண்பன் பழைய ஆசைகளுடன் வாங்கித்தருகிறான். இது தன்னையே அறியாமல் தன்னையும் மீறி எழுந்த பழய அன்பின் ஆவேசச் செயல்களாகும். அந்த ஆவேசம் தணிந்த பிறகுதான் அவனுக்கு ஏன் வெட்டிக்கு தண்டச் செலவுகள் செய்தோம் என்ற நினைப்புகள் தொடங்குகின்றன. இந்த சுயநல துவேஷ நினைப்பு அந்த ஆவேசத்தின் போது உண்டாகாமல் அப்போது ஒருவரையொருவர் தழுவிக் கொள்ளவே செய்கிறது.

விவாகம் செய்து கொண்டு ஒரு குழந்தையைப் பெற்றதும் யுவதியும் யுவனும் ஸம்சாரதர்மத்தின் ஸகல மர்மங்களையும் உணர்ந்தவர்கள் போலாய் விடுகிறார்கள். மற்றவர்கட்கு அதை உபதேசிக்கவும் புறப்பட்டு விடுகிறார்கள்.

# குடும்ப விநோதக் குறள்.

### 1. அன்பிலா நெஞ்சு.

1. சண்டையும் பூசலும் சர்க்கரைப் பொங்கல்போல்
இன்பமாம் அன்பிலார்வீட் டில்.

2. கோடிப் பணமே குவித்தாலும் என்னபயன்
தேடிமேன் (பு) இல்லை யெனின்.

3. அன்புள்ளோர் பேச்சு அமிர்தமாம் அல்லாரின்
இன்மொழியும் வேப்பங்கா யே.

4. அன்பும் இரக்கமும் அற்றவர் வீட்டினில்
என்றுங் கலகமொழி யே.

5. நாய்கழுதை யுங்கூட நாடாது அன்பின்றி
வாயளக்கும் புல்லர் வழி.

6. சொன்னசிறு சொற்களிலும் சொட்டைதேடும்
அன்புநிலை காண்டல் அரிது. [அற்பரிடம்

7. வெறுங்கடித வாசகத்தின் வீச்செல்லாம் வீணும்
சுருங்கிவிடும் அன்பென்றே சொல்.

8. சிடுசிடுக்குங் கொள்ளிமுகம் சிந்தையதின் அன்பைப்
பிடுங்கி உரிஞ்சிடுமோர் பேய்.

9. சொத்தைச்சொல் பேசிடுவாள் சொல்லும் மருகியைக்
கொத்திவதை செய்யுமாம் கூற்று.

10. அன்புமுகம் இன்பமுகம் அல்லாத கோணல்முகம்
துன்பமுகம் என்றே துணி.

T. S. குழந்தைவேல் முதலியார்.

---

*தமிழில் காலணாப் பத்திரிகைகள் தோன்றியிருக்கின்றன. "சுதந்திரச் சங்கு" பழய பத்திரிகை. "வீரபாரதி", "காந்தி" என்பன புதியவை. இது ஏஜண்டுகளை நம்பியவியாபாரம். பழங்காலத்தில் தஞ்சாவூரில் 'ஜனானுகூலன்' "யதார்த்த வசனி," புதுச்சேரியில் "புதுவை நேசன்" இவைகள் காலணாவுக்கு விற்றன. திரிச்சியில் "பிரஜானுகூலன்" வாரப்பத்திரிகை இரண்டு தம்பிடிக்கும், சென்னையில் "பை பத்திரிகை" ஒரு தம்பிடிக்கும் விற்றன. எத்தனையோ ஏஜண்டுகள் மோசம் செய்து பட்டுக் குல்லா போட்டனர்.*

# கல்யாணங்கள்.



கல்யாணம் என்னும் பதத்துக்கு ஸந்தோஷமென்று பொருள். கல்யாணமானது பெண்ணுக்கும் புருஷனுக்கும் இன்றியமையாத ஒரு கடமை. விவாகம் செய்துகொண்ட புருஷன் தன் வயிற்றுக்கு அன்னம் தேடுவதுடன், தான் பாணிக்கிரகணம் செய்த பத்தினிக்கும் அன்னம் தேடவேண்டியவனுகிருன். ஆலோசனையின்றி வரனுடைய ஸ்திதியை யறியாமல் பெண்ணைக்கொடுப்பது ஆபத்தாகும். இனி பி. ஏ. பரீக்ஷைதேறி டிப்டி கலெக்டர் வேலையை அடைவான் என்ற நம்பிக்கையைவிட, இப்பொழுதும், பின்னுக்கும் அன்ன வஸ்திரத்துக்குப் போதுமான பொருள் இருக்கிறதாவென்று அறிந்து பெண்ணைக்கொடுப்பது எத்தனை மேன்மை! இன்றைக்கு ஒருவனுக்கு 40-காணி யிருந்தால், நாளை அவனுடைய நான்கு பிள்ளைகளும் ஆளுக்குப் பத்து காணிகளாகப் பிரித்துக் கொள்வர். அதற்கடுத்த ஸந்ததியில் அந்தப் பத்து காணிகள் இன்னும் பிரிந்து தொலைந்து நடுச் சந்தியில் வந்து விடுவர். ஆகவே, எவ்வளவு சொத்து இருந்தாலும் வரனுக்கு ஸ்வயமாக ஸம்பாதிக்கும் திறமை யுண்டாவென்று யோசிக்க வேண்டும். எவனுக்கு சுறுசுறுப்பும், தீக்ஷண்ய புத்தியும், பிறரை மரியாதை செய்யும் நற்குணமும் உண்டோ அவன் யாதொரு ஆடங்கமுமின்றி ஸம்பாதிப்பன். ஸம்பாதிக்கும் திறமை யென்பது பரீக்ஷை தேறியவர்கட்கு மட்டுமே உண்டென்று சிலர் நினைக்கின்றனர். இது தப்பு. இங்கிலீஷ் பாஷையைக் கற்காமலே அநேக வியாபாரிகள் கோடி கோடியாகத் திரவியம் தேடுகிருர்கள். இங்கிலீஷ் வித்தையானது ஜீவனத்திற்கு ஏதுகரம்தான். அத்துடன் வேறு விதமாயும் ஸம்பாதிக்கும் திறமை யிருப்பது விசேஷமன்ருே?

ஃ

கல்யாணம் செய்வதால் உண்டாகும் இன்பம் பெண்ணுக்கும் பிள்ளைக்குமே யன்றி வீட்டிலுள்ள ஜனங்களுக்கன்று. மணமகனுல் மணமகளுக்கும், மணமகளால் மணமகனுக்கும் சுகம் உண்டாகுமா என்பதே முக்கிய விஷயம். படிக்காத பெண்ணை விவாகம் செய்வது கூடாது. அதிலும் கற்றறிந்தோனுக்கு எழுத்து வாசகம் தெரியாத மட்டியை மண முடிப்பதைவிட சண்டாளத்தனம் வேறில்லை. இவ்விதமே படித்த பெண்ணுக்குப் படியாத எருமையை விவாகம் செய்வதை விட நாசம் வேறு வேண்டாம். புருஷன், "அடி உன் தாலியறுந்துவிழ" என்று தூஷிக்க, அதற்கு மனைவி "நீ செத்தாலன்ருே என் தாலி யறுந்துவிழும்" என்று ஏச, அதற்குப் புருஷன் "நான் சாகிறவரை காத்திருக்க வேண்டாம், உன் தாலியை இப்போதே யறுக்கிறேன்" என்று அறுத்தெறிய, அப்போது மனைவி "நீ சாகும்வரை நான் காத்திருப்பானேன், இப்போதே நீ

---

சிலரிடம் அதிகம் நெருங்கினுல், அல்லது அவர்கள் நம்மிடம் அதிக நாள் உறவு கொண்டு தங்கினுல் பிறகு கலகம் விளைகிறது. அவர்கள் காட்டுகிற அன்னியோன்னிய நடிப்பு அவர்களின் சொந்த காரியத்திற்காகவே தான்.

செத்ததா யெண்ணிக்கொண்டு மார டித்துக் கொள்கிறே" னென்று தலை யிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு ஒப்பாரி வைக்க, இப்படியாக முன் செய்த கல்யாணம் பின் கல்லெடுப் பாய் முடிவதில் யாருக்கு என்ன சுகம்? ஆகவே, விவாகத்தில் அவசரப் படக்கூடாது. இதன்றி இன்னொரு பெரிய விஷயமுண்டு. காமத்தை ஜெயிப்பது மகா கஷ்டம். முனிவர் களும் காமத்தால் அழிந்திருக்கின்ற னர். அவ்விதமாக சிறு பெண் காமத்தை யடக்கிக் கொள்வாளென்று மௌடிகமாய் எண்ணி காமசாந்தி செய்யச் சக்தியற்ற வயோதிகனுக்கு விவாகம் செய்து தருவதைவிட அப் பெண்ணைக் கொன்று விடுவதுமேல். ஒரு ஆங்கிலேய பண்டிதர் "அப்பா! என்னைக் கொன்றாலும் கொல்லு; என் நற்பெயரை மட்டும் சொல் லாதே" என்றார். மானமானது பிரா ணனைவிட மேலானது. விருத்த விவாகத்தால் பெண்ணின் மானம் தவறி அவள் காமவசமாகித் தீய நெறி யிற் சென்று கெடுவதுடன், அந்த விருத்த மதிஹீனனின் வமிசத்துக் கும் அபக்கியாதி வாய்க்கின்றது. மனிதர்கட்குக் கீர்த்தியாலும், ஸத்தி யத்தாலும், ஸத்கிருத்தியத்தாலும் சுக முண்டாவதால் அந்த சுகத்தை விருத்த விவாகம் பாழ் படுத்தி விடுகிறது. தன்னுடைய ரதிசுக இன்பத்தைக் கெடுத்துத் தன் னைக் கல்யாணம் செய்து கொண்ட கிழவனைக் கண்டு அப்பெண் நகை முகம் காட்டுவாளோ? கொஞ்சி விளை யாடுவாளோ? அவளுடைய கண் ணுக்கு அவன் கோரமாகத்தான் தோற்றுவன்? அனுகூலமான ஸ்திரீயை மனைவியாக அடையாதவர் களின் இல்லறம் நல்லறமாமோ?

ஃ

ஏழைகளாயினும் மனமொத்த தம்பதிகளின் வாழ்வே உயர்ந்தது. புருஷனின் வேலையில் மனைவியும் பங்கெடுத்துக்கொண்டு உழைத்துப் பாதி வேலையை அவள் செய்து தர வேண்டும். புருஷன் துணி வெளுப் பவனாயின் மனைவியும் அவனுடன் ஆற்றுக்குச் சென்று துணிகளைத் துவைக்கவேண்டும். அப்பொழுது தான் பரஸ்பரம் பிரீதி ஏற்படும்; அன்னியோன்னியம் பெருகும். தன் கணவனான வலைஞன் இன்னும் வர வில்லையே யென்று ஒரு எளிய குடி சையில் ஒரு பெண் எதிர்பார்த்தபடி யிருந்தாள். கிழிந்த வலைகளை யெல் லாம் தைத்து ஒழுங்காக்குவது அவள் வேலை. அவளுக்கு ஐந்து குழந்தை கள். அன்று பெரும்புயலும் மழையு மாக இருந்தது. வலைஞனோ மீன் பிடிக்கச் சென்று கடலில் வெகு தூரத்தில் புயல் காற்றால் கஷ்டப்பட் டுத் திண்டாடி நின்றான். பெண்ணோ நெடுநேரம் காத்தும் வராமையால் புயலையும் பாராது வெளியிற் சென் றாள். அங்கோரிடத்தில் ஒரு எளிய குடிசை. ஒருவிளக்கு எரிந்து கொண் டிருந்தது. குடிசையி லிருந்தவள் பிணமாகிவிட, அவளுடைய இரு குழந்தைகள் அங்கு இருந்தன. சற்று யோசித்து நின்று கடைசியில் அக் குழந்தை களிருவரையும் எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்கு வந்து சேர்ந் தாள். சற்று நேரம் பொறுத்து, வலை ஞன் வீட்டிற்கு வந்து புயலால் ஒரு மீனும் கிடைக்காமல் வலையும் கிழிந்து

---

மொத்தமாகப் பலம் கணக்கில் மூக்குத்தூள் வாங்கி வீட்டில் வைத்தால் இரவல் கேட்பவர் சிட்டிகைப் பொடி கேட்பதில்லை, தங்கள் டப்பியில் மட் டையில் கொட்டும்படி கேட்டு வாங்கிப் போய் விடுகிறார்கள். அதை விடக் காலணா இனமாகத் தந்து வாங்கிக்கொள்ளும்படி கூறிவிடுவது மேல்.

தான் பிழைத்துவருவதே கஷ்டமாகி விட்டதென்றான். அவன் மனைவி அவன் வந்ததே பெரிய பாக்கியமாக நினைத்து ஆநந்தத்துடன் வரவேற்று உபசரித்துவிட்டு, குடிசையில் இறந்துவிட்ட பெண்ணைப் பற்றியும் குழந்தைகள் திக்கற்றுப் போனதையும் தெரிவித்தாள். வலைஞன் விசாரத்துடன் சிந்தித்துவிட்டு, நமக்கோ ஐந்து குழந்தைகள், அவற்றைக் காப்பாற்றவே நமக்கு சக்தியில்லை; ஆயினும் கடவுளே நமது கஷ்டத்தைப் பார்த்து வழி செய்வாரென நம்பி இறந்த பெண்ணின் இரு குழந்தைகளையும் இங்கு எடுத்து வந்து விடுகிறேன். அக் குழந்தைகளையும் நாமே வளர்ப்போம்; கடவுள் கைவிட மாட்டார் என்று அந்தக் குடிசைக்குப் போகப் புறப்பட்டான். அவன் மனைவி அப்படியே தான் நானும் நினைத்து அவ்விரு குழந்தைகளையும் அப்பொழுதே எடுத்துக்கொண்டு வந்து விட்டேன். உள்ளே போய்ப் பாருங்கள் அவைகள் தூங்குகின்றன என்றாள்! வலைஞன் ஆநந்தத்தோடும் உட்சென்று அவ்விரு குழந்தைகளையும் கண்டு முத்தங் கொடுத்துக் கடவுளைப் பிரார்த்தித்தான். கணவனும் மனைவியும் இவ்விதமாக ஒருமனப்பட்டு அந்நியோந்யமாகி இருக்கும் வாழ்க்கையன்றே இன்ப வாழ்க்கை. இந்த உத்தம தம்பதி அந்நியோன்னியம் ஏழைக்குடிசையி லிருந்தபோதிலும் அதுவே அரண்மனை யாகும். இந்த அந்நியோன்னிய மில்லாத வாழ்வு எத்துணைச் செல்வம் நிறைந்திருப்பினும் அது நரக வாழ்வே யாகும். ஒரு பெண்ணுக்கு நல்ல வாழ்வு அமைவது அன்னியோன்னிய மூள்ள உத்தமக் கணவனாலாகும். அவ்விதமே ஒரு ஆடவனின் வாழ்வு மேன்மைப்படுவது நற்குணப் பெண்டிரால்.

---

ஆநந்தத்தையே ஒருமிக்க யுண்டாகக் கூடிய அமிர்தச் சுவையின் ருசியையறிந்த நம் "அமிர்த குணபோதினி" சந்தா நேயர்களே! நீங்கள் இவ் வருஷம் ஒரு புதிய சந்தாதாரை யாவது சேர்த்துக் கொடுத்தோ மென்ற திருப்தி உங்களிட முண்டாகக் கடவது.

அ. கு. மானேஜர்.

லேடி டாக்டராயுள்ள மாது சிரோன்மணிகளிற் சிலர் பாதி ஆங்கில நாகரீகமாய் அதற்கான நாகரீகமோஸ்தரில் ஒரு புது நடை கொண்டு உலாவுகின்றனர். இவர்களைக் காண்போர் இந்தப் பெண்ணும் குடித்தனத்துக்கு உதவுமா என்று நினைக்கும்படியாக இருக்கிறது. எவ்வளவு படிப்பிருப்பினும் குடித்தனப் படிப்பில்லாப் பெண் மணமற்ற மலரேயாவாள்.

---

வெயில் நெருப்புபோல் சுடுகிறது, இந்த வெயிலில் மிளகாய் வற்றல், காய்கறிகளின் வற்றல் முதலியவைகளைப் போட்டுக் கொண்டு வீட்டுக்கு வேண்டியவற்றைச் சேகரித்துக் கொள்ளும் அறிவு பழய காலத்தியதாகும். தற்கால நாகரீக ரமணிகளுக்கு வற்றல் வகைகளே பிடிக்காமலிருக்கலாம். ஆனால் நெய்யில் வறுத்து வைத்தால் மட்டும் உண்ணத் தெரியலாம்போலும்.




(182-ம் பக்கத் தொடர்ச்சி.)

695. Men's judgments are a parcel of their fortunes.

SHAKESPEARE.

மனிதர்களுடைய நியாயமான தீர்ப்புகளே அவர்களுடைய பொக்கிஷ மூட்டைகளாகும். ஷேக்ஸ்பியர்.

696. The purest treasure mortar times afford, Is spotless reputation. SHAKESPEARE.

மாசு இல்லாத கியாதியே மானிடருடைய மாசற்ற சூடாமணியாகும்.

ஷேக்ஸ்பியர்.

697. How poor are they that have not patience!

SHAKESPEARE.

பொறுமையற்றவர் சிறுமையுறுவது திண்ணம். ஷேக்ஸ்பியர்.

698. In all things throughout the world, the men who look for the crooked, will see the crooked, and the men who look for the straight, will see the straight. RUSKIN.

குறுகிய நோக்க முடையவரின் கண்கள் எத்திசையை நோக்கிலும், ஏழேழு பதினாலு லோகங்கள் புக்கினும் குறுகிய நோக்கங்களையே காணும். நேர்மையான நோக்கமுடையவரின் கண்களோ எங்கு பார்க்கினும் நேர்மையையே காணும். ரஸ்கின்,

699. Self love, my liege, is not so vile a sin; As self-neglecting. SHAKESPEARE.

அரசே! தன்னை அசட்டை செய்வதால் ஏற்படும் பாவத்தை விட தன்னைத்தான் நேசிப்பதால் ஏற்படும் பாவம் பெரியதல்ல. ஷேக்ஸ்பியர்.

700. What stronger breast-plate than a heart untainted.

SHAKESPEARE.

மாசற்ற மனத்தைவிட பலமான கவசம் ஹிருதயத்துக்கு வேறொன்றுமில்லை. ஷேக்ஸ்பியர்.

701. Every right action and true thought sets the seal of its beauty on person and face; every wrong action and foul thought its seal of distortion.

RUSKIN.

ஒவ்வொரு நற்காரியமும், சுத்தமான எண்ணமும் முகத்திற்கு வசீகர சக்தியைக் கொடுக்கிறது. கெட்ட காரியங்களும், அசுத்த எண்ணங்களும் இருக்கும் இயற்கை யழகையும் கெடுத்து அவ்வெண்ணங்களின் அறிகுறிகளாக அவலக்ஷணத்தைப் பிரதிபிம்பிக்கச் செய்கிறது. ரஸ்கின்.

---

அவன் இவனைக் கோபத்தில் அடித்து விடுகிறான். அடிபட்டவன் வழக்கு தொடுக்கிறான். இருபக்கத்திலும் சாக்ஷிகள் முளைக்கின்றனர். ஏராளமான திரவியம் செலவாகிறது கடைசியில் போதிய ருஜுவில்லை யென்று வழக்கு தள்ளப்பட்டுப் போகிறது. அடிகளைப் பெற்றதோடு பணச் செலவும் வேறே!

702. Strong in will to strive, to seek, to find, and not to yield.

TENNYSON.

பலமான மனோசக்தி கஷ்டப்பட்டுப் பார்த்துத் தேடிக் கண்டுபிடிக்குமே யொழிய, தைரிய மிழந்து விட்டுவிடாது. டெனிசன்.

703. The good in this state of existence preponderates over the bad, let miscalled philosophers tell us what they will.

DICKENS.

தத்துவசாஸ்திரிகள் எப்படியாவது தர்க்கிக்கட்டும்; மனிதனுக்கு நேரும் தீமைகளைவிட, நன்மைகளே அதிகமாயிருக்கின்றன. டிக்கேன்ஸ்.

704. No man who is truly ready to take part in a noble quarrel will over stand long in doubt by whom, or in what cause, his aid is needed.

RUSKIN.

நியாயக் கக்ஷியில் எப்போதும் சேரவிருப்பமுள்ள ஒருவன் எக்கக்ஷியில் சேருவது நல மெனத் தீர்மானம் செய்ய யோசனையே வேண்டுவதில்லை.

ரஸ்கின்.

## நயவஞ்சனை நயவஞ்சகமாகவே வெற்றிகோள்.

நீ உண்மை யுள்ளவனையும் கபட மற்றவனையு மிருந்து, உன்னை நயவஞ்சகமாய் ஏமாற்றினோரிடம் நீ பிறகு அந்த வஞ்சகம் தெரிகிறபோது அதை எடுத்துச் சொல்லிப் பகைத்துக் கொள்வது புத்திசாலித் தனமாகாது. நீ விழித்துக் கொண்டாய் என்று அவர்கள் அறிந்தாலும், உன்னால் எதுவும் செய்ய முடியாதென்று உன்னை அலக்ஷியமாய் மதித்து விடுகிறார்கள். அத்துடன் நீ ஏதாவது தீங்கு செய்யலாமென்று அவர்கள் எச்சரிக்கை யாகியும் விடுகிறார்கள். இவ்விதம் அவர்களைத் தட்டி எழுப்பிவிடுவது பெரியதவறு. உன்னை ஏதும் தெரியாதவ னென்றும், தங்களின் வஞ்சகத்தை நீ இன்னும் அறியவேயில்லை யென்றும் அவர்கள் நினைப்பதை அப்படியே நினைத்துக் கொள்ளும்படி விட்டுவிட்டு, உள்ளுக்கு நீ மறைந்து சிரித்துக்கொண்டே வேலை செய்து அவர்களின் நயவஞ்கத்தைத் தவிடு பொடியாக்கி விடப்பார். அதுவே சாமர்த்தியம். நயவஞ்சகஸ்தர்களை நயவஞ்சக மாகவே சென்று தான் ஜெயிக்கவேண்டும் ஜெயிப்பதில் கவனித்துச் செலுத்து. பகைக்கும் சங்கதி அதற்கு பிறகு ஆகட்டும்.



# ஹாஸ்ய சஞ்சீவினி



பாப்பம்மாள்:—குப்பம்மா! என்ன நீ சும்மா இருக்கிருயே. போனவள் போனுள். இருக்கிற ஒண்டிக்கார மனிதனுக்கு ஒரு கால்கட்டு சட்டி வைக்க வேண்டாமா? இந்த வீடு இப்படியே போய்விடுவதா? ஏதாவது காய்காய்த்துக் குழந்தை குட்டிகளுமாக விளங்க வேண்டாமா? சும்மா வாய் மூடிக்கிடக்கிருயே?

மாகதம்மாள்:—நான் ஒருத்தி என்னடி செய்கிறதம்மா? அவன் படித்த பெண்ணுக அல்லவோ வேண்டுமென்கிருன்? படித்த பெண்ணை எங்கே தேடுகிறது?

பாப்பம்மாள்:—உங்கள் தாயாதி வகையில் ஒரு பெண் இருக்கிறதே, அதைப் பார்க்கலாமே. பழய உறவும் விட்டுப் போகாமல் இருக்குமே.

மாகதம்மாள்:—ஐயோ! அம்மாடி! அவர்கள் பெண்ணு? அவர்கள் சம்பந்தமே வேண்டாமம்மா. இதற்கு முன்பு அவர்களிடம் பட்டபாடு போதும். அவர்கள் எங்கள் சொத்துகளைக் கொள்ளை யிட்டதும் போதும். கால முழுதும் கோர்ட்டுக் கச்சேரியாகவே இருக்கப்பட்டவர்களுடன் உறவு வைத்துக் கொண்டால் நாமும்கோர்ட்டுக் கச்சேரி ஏறும்படி வரும். அந்தப் பொல்லாதவர்களின் பேச்சே வேண்டாம்.

சீதம்மாள்:—நாராயணசாமியின் பெண்ணைப் பார்க்கலாமே. பெண்ணும் எவ்வளவோ அழகாயிருக்கிறது.

மாகதம்மாள்:—பெண்ணு அழகு தான். ஆனல் அவர்கள் இப்பொழுது எழ்மையில் தவிக்கிருர்கள். வெகு காலத்து உறவு ஆனதால், அங்கு சம்பந்தம் செய்தால், முதலில் மெதுவாகப் பெண்ணின் தம்பியையும் அவளுடனே அனுப்பிவிட்டு அப்பால் அவர்களும் வீட்டோடேயே வந்து குந்திக் கொள்வார்கள். வெகு கஷ்டமாய் விடும். அது வேண்டாம்.

பாப்பம்மாள்:—உன் நாத்தி சேஷம்மாள் பெண் புஷ்பவதியாகி நாலைந்து வருஷம் ஆகிறதே. வீட்டுவேலையிலே வெகு கெட்டிக்காரி. நன்ருக உழைக்கிற பெண்.

மாகதம்மாள்:—எனக்கும் அந்த இடம் பிரியமே. ஆனல் அந்தப் பெண்ணுக்குப் படிப்பில்லையே. அவன் ஒப்பமாட்டானே. படிப்பில்லாத பெண்ணைவிட விவாகமே வேண்டாமென்கிருனே.

சீதம்மாள்:—சுப்பையாவின் பெண் உனக்குப் பிடிக்குமா?

மாகதம்மாள்:—அவளா? பெரிய பட்டியாயிற்றே. தாய் என்னவோ மகா சாது தான். அவள் வயிற்றில் இவள் எப்படிப் பிறந்தாளோ தெரியவில்லை. அவளோடு போராடுவதற்கு என்னுல் ஆகுமா? ஒரு பேச்சுக்கு நூறு பேச்சு பேசிவிடுவாளே!

பாப்பம்மாள்:—நீதிருவாளூருக்குப் போனுயே, அங்கே ஒரு பெண் இருக்

---

ஒவ்வொரு மதஸ்தரும் புறமதஸ்தரை அறிவில்லாதவர்களென்றும், அவர்களுடைய கொள்கைகள் தவறென்றும் அபிப்பிராயப்பட்டு, தங்கள் மனதை அன்னியரைப்பற்றி ஏசுவதாலும் குறைவாகப் பேசுவதாலும் அசுத்தப்படுத்திக் கொண்டு தங்களின் கெட்ட குணத்தை விர்த்தி செய்து கொள்கின்றனர்.

-கிறதென்ருயே, அதையாவது முடிக் கப் பார்.

மரகதம்மாள்:—அந்தப் பெண்ணுக்குத் தாயும் தகப்பனுமில்லை. சிற்றப்பன் ஒருவன் இருக்கிருன். அவன் பெண்ணை எப்பொழுது கட்டிக் கொடுத்துத் தலை முழுகுவதென்று காத்திருக்கிருன். பேசுவதெல்லாம் வெகு தித்திப்பாக இருக்கிறது. கலியாணமாய் விட்டாலோ அவர்கள் மெதுவாக விலகி விடுவார்கள். போய் இரண்டு நாள் இருந்து வரக் கூட முடியாது. பெண்ணும் அனுதைப் பெண்ணு.

சீதம்மாள் : —ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு குற்றம் பேசுகிருய். தஞ்சாவூராரின் பெண்ணைக் கேட்கலாமே.

மரகதம்மாள்:—அவர்கள் இரண்டாந்தாரமாகக் கொடுக்கமுடியாதென்று சொல்லி விட்டார்கள். உங்கள் வீட்டிலேயே ஏதோ தேவதையிருக்கு. எங்கள் பெண்ணுக்கும் கஷ்டம் வரும் என்று சொல்லி விட்டார்கள்.

பாப்பம்மாள்:—சேலத்துப் பெண் நல்ல குணசாலி. ஆனல் கன்னங்கரேலென்று கருப்பு. பிறக்கிற குழந்தையும் கருப்பாகத்தான் இருக்கும், ஆசையோடு சிவப்பென்றும் அழகு என்றும் அந்தக் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொள்ள முடியாது.

சீதம்மாள்:—பாப்பம்மா சும்மா பழிக்காதே. உன் வீட்டுக்காரரின் கருப்பை விட அந்தப் பெண் கெட்டுப் போகவில்லை. மாணிறந்தானே! கருப்பென்றுல் என்ன? —கட்டிக் கொண்ட பிறகு எல்லாம் சிவப்பாகப் போய்விடும். எவ்வளவோ சிவப்பு மூஞ்சிகளுக்குக் கருப்புக்குட்டி வந்திருக்கிறதே?

இவர்களின் ஸம்பாஷணை முடிவதற்குள்ளாகப் பக்கத்து வீட்டில் தீப் பிடித்துக் கொண்டதால் எல்லோரும் அதை அணைக்கச் சென்றுர்கள்.

---

ராமன்:—என் மனைவி அரைப் பானைச் சோற்றை அப்படியே விழுங்கிவிடுகிருளப்பா.

சோமன்:—இது விவாகத்திற்கு முன்பே தெரிந்திருந்தால் வேறு பெண் பேசியிருக்கலாம். இப்போதென்ன செய்கிறது?

---

கேர்பு:—ஒரு அணுவுக்குச் சில்லரைவேண்டுமா? ஏன்?

கிட்டு:—என் மனைவி அரையணு கேட்கிருள். ஒரு அணு தந்தால் அரையணு திரும்பாது. அதற்குத் தான்.

---

முத்து:—இவ்வளவு கடிதங்களும் தபாலுக்கா? இவர்களெல்லாம் உன் நண்பர்களா?

ரத்தினம்:—நான் உத்தியோகத்திலுள்ள வரை நண்பர்கள் தான்.

---

ராஜம்:—உன் மனைவிக்கும் எதிர் வீட்டாருக்கும் சண்டையா?

வேணு:—ஆம், சண்டைவந்தது நல்லதே. வீட்டுச் சாமான்கள் இரவில் வீணே தொலையாதிருக்கும்.

---

நண்பர்:—அவருக்கு நீங்கள் ஏன் நாவல் எழுதித் தரவில்லை?

ஆசிரியர்:—அவர் நாவலைப் பெற்றுக் கொண்டு வந்தனம் சொல்வாரே தவிர, பணம் கொடுக்கப்பட்டவரல்ல.

---

# சிறுமணித்திரள்

## (அனுபவ மணிகள்)

874. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்றதில் அன்னை என்பதை ஏன் முன்வைத்துக் கூறப்பட்டுள்ளது? அவளே உன்னை முதலில் கண்டதும் மெய்மறந்தவள். ஆனால், தாய்க்குச் "சட்டி" கொடுத்தவர்களை எண்ணுகையில் மனம் நடுங்குகிறது; நீ அவ்வன மிராதே. தாய் மனம் நோகத் தரணியில் வாழ்ந்தோரை நீ கேள்விப் பட்டிருக்க மாட்டாய். [மருகியின் மீதுள்ள துவேஷத்தால் தன் குமாரனை எவ்வளவோ சபித்தும், அந்தத் தாயின் முன்பாகவே குமாரன் சுகமாக வாழ்வதைக் கண்டிருக்கிறோம். அவ்வித வாழ்வுக்கு அந்த குமாரனின் பரிசுத்த மனதும் தாயினிடத்து வைத்த மாசற்ற அன்புமே காரணம் ஆனால் இது வேறு விஷயம். ப-ர்.]

875. இந்தியாவில் அரசாங்க கணக்குப்படி மனிதற்கு சராசரி வயது 23-தான். அதில் சாமான்ய கல்வியில் 16-வயது தீர்ந்து விடுகிறது மீந்தது 7-வயதே. அதில் 3½ வருடம் இராக்காலத்தில் கழிந்து விட பாக்கியோ 3½ வருடங்களே; இதில் துக்கம், சஞ்சலம், வியாதி 3-வருடத்தை கட்டாயம் கொள்ளை கொண்டு விடுமென்பது மிகையல்ல; எஞ்சியது ½ வருடமே; அதையால் நன்றென்பதை இன்றே செய். இன்றென்பதை இப்பொழுதே செய். அது உன் கடமை.

876. அழகிய மயிலைக் கண்ட வேடன் அதைக் கொல்ல முனைகிறான். கவிவாணரோ பாக்களில் இசைத்து இன்புற எண்ணுகிறார். ஓவியக்காரரோ அதை சித்திரம் வரைந்து மகிழ நினைக்கிறார். ஒரு பொருளே பல தோற்றங்களாய் விளங்குகின்றன; நீ எதையும் அன்பு கொண்டு பார்த்திடில் கடவுளின் உன் அன்புக்குப் பாத்திரமாவாய்—பிறர் புகழ வாழ்வாய்.

877. ஓராண்டு படித்து வீண் போய் விட்டதே என அக்கறை கொண்டு கற்றிடில் அடுத்த ஆண்டு வெற்றிக் கடவுள் கட்டாயம் உன்னை வந்து காண்பார். எதிலும் கஷ்டத் துக்குத் தக்க கூலியுண்டு. எதற்கும் கடவுள்மேல் பாரத்தைப் போடாதே. இது கொண்டே, "தெய்வத்தாலாகா தெனினும் முயற்சி மெய் வருந்தக் கூலிதரும்" எனக் கவியரசர் வள்ளுவர் கூறுவாராயினர்.

878. உன் வீட்டு வாசல் நிலை தாழ்ந்திருப்பது உனக்குத் தெரியும். ஆனால் ஒருதடவை அதில் பலமாக இடிக்கப்பட்டபின்பு தான் அநுபவ உணர்ச்சி பெறுகிறாய். நீ கற்றவை யெல்லாம் புத்தகத்திலுள்ளதே. அவர்

---

அவர்கள் வீட்டில் சண்டையானால் இவன் அதற்கு அபராதம் கொடுப்பது போல, அங்கு கோபித்துக் கொண்டு தன் வீட்டிற்கு வந்து குந்தியவர்களுக்குப் பலநாளைக்கும் ஆக்கிப்போடவேண்டி வருகிறது. இந்தச் செலவால் ஏதேனும் பயனுண்டா? நன்றி விஸ்வாசமுண்டா? மெதுவாகக் கை கழுவிக் கொண்டு போய் விடுகிறார்கள்! இது பூர்வம் பட்ட கடனோ?

கள் அநுபவத்தில் சிறந்த பெரியோர்களாகும். அவர்களிடத்துப் பணிந்து நட.

879 தோற்றத்தையும் உடையையும் கொண்டு நாம் எத்தனையோ நண்பர்களை நேசித்து விடுகிறோம். அவர்களின் கபடமும் தன்னலமும் நாள் செல்லச் செல்ல வெளிப்பட்டு நம்மைப் பெரிய சஞ்சலத்துக்குட் படுத்தி விடுகிறது.

880. நாம் அல்பமாக எண்ணும் மனிதர் பெரிய கவியரசரா யிருக்கலாம். அல்லது அநுபவமிகுந்த கிரந்த கர்த்தாவா யிருக்கலாம்; கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் தோற்றத்தில் சாமான்ய மனிதராகவே யிருந்தார்.

881. கல்யாண தினத்தன்று எத்தனையோ சந்தோஷத்துட னிருந்த குடும்பத்தில் இன்று சஞ்சலம் நிறைந்து காணப்படுகிறது. ஏன்? அன்று செட்டியிடம் கடன் வாங்கிப் பாண ஊர்வல வேடிக்கை செய்த 2000—ம் ரூபாய் இன்று வட்டியுடன் 4000—ம் ஆய்விட்டதுடன் அதற்கு வாரண்டும் வரும் தருவாயி லிருப்பதால் தான். [ஒரு தினத்துக் கல்யாணமே சரி. ஒரு நாள் விவாகத்திலுங் கூட மூன்றுநாள் விருந்துச் செலவு நுழைந்து கொள்கிறது. ப-ர்.]

882. தோட்டங்களில் நீர்பாய்ச்சிச் செடிகளை வளரச் செய்வது போலவே, உண்மைத் தோழர்களின் உன்னதப் பார்த்திகளில் அன்பு நீர் பாயச்செய்து நட்பெனும் செடிகளை வளரச் செய்யவேண்டும், [உண்மையான நண்பர்களிடத்துங்கூட எவ்வளவோ வருத்தங்களும் குற்றங்களும் மலிந்துள்ளன. அவற்றை யெல்லாம் கவனிக்காமல் சென்றால் தான் நட்பு நிலைக்கும். ப-ர்.]

883. ஆறுலக்ஷம் கிராமங்களைக் கொண்ட நம் தேசத்தில் 100—க்கு 8-பேர்கள் கூட கல்வி கற்றவர்களா யில்லை யானால் 95—பேர் சாமான்ய ஜனங்களேயாவார். அவர்களிடத்து கடவுள் பயம் வேண்டாமென ஒரு சிலர் கூறுவதைப் புகட்டிவிடில் யாண்டும் அநீதியே பரவிவிடும். மதமும் கடவுளும் மனித வாழ்க்கையின் சட்டங்களே யாகும். [கடவுள் பயம் இல்லையாகில் மடவார் கற்பும் இல்லை. அந்தக் கற்பு இல்லையெனில் உலக சமாதானமும் இல்லை; குடும்பம் என்பதும் இல்லை. ப-ர்.]

884. ஒரு பி. ஏ. பட்டதாரியைப் பம்பாயில் கொண்டு போய்விட்டுவிடின் தனக்கு வேலை கிடையாமல் திண்டாடிப் பசிக்கொடுமையால் பரலோகம் சென்று விடவும் கூடும். ஆனால், பாமர மக்களோ எவ்வேலையாவது செய்து உலகயியல்பில் ஒட்டி நின்று வாழத்திடம் பெற்று விடுவர். [சாமானிய வாழ்க்கையை நடத்த எங்கும் வசதி கிட்டும். ஆனால், மேஜை—நாற்காலி வாழ்க்கை சித்திப்பதுதான் அதிக கஷ்டம். ப-ர்.]

885. தங்கமும் பித்தளையும் நிறத்தில் ஒன்றாகவே காணப்படுகிறது. ஆனால், பித்தளையை விரும்புவோரைத்தான் காணோம். அதுபோல் எல்லோரும்மனிதர்கள்தானெனினும் கிரந்த கர்த்தாக்களுக்குத் தனிமதிப்

---

அவளும் இவனும் சந்திக்கிறார்கள். இருவருடையவும் அந்தரங்க ஆவலாதிகள் வெவ்வேறே. அதில் இருவரும் எவ்வளவோ நிபுணர்கள். ஆனால், வெளி முகத்திலோ இருவரும் பரம சாதுக்களாய் சாதாரணமான தன்மையில் பேசி விடைபெற்றுப் பிரிகிறார்கள். அவரவர்களின் செயல்கள், எண்ணிய எண்ணங்கள் அவரவர்களின் மனத்தினுள்ளேயே மறைந்து நின்றுகொள்கின்றன

புண்டு. [மதிப்புகிடைப்பது சரிதான். ஆனால், கிரந்தகர்த்தர்களுக்குத் தமிழ் நாட்டில் வயிறு நிரம்ப அன்னம் கிடைப்பது தான் குதிரைக் கொம்பா யிருக்கிறது. அவர்களுடைய உத்த மோத்தமமான நூல்களை ஜனங்கள் அதிகமாக ஆதரித்துப் பசி தீர்க்கவும் அவ்வளவாக முன் வருவதில்லை. ப-ர்.]

886. பண்டைக் கல்வி முறை கணக்கில்லாத தீர்க்க தரிசிகளை ஈன்றன; தற்காலக் கல்வியோ டாம்பீகத்தில் மோக முள்ளவர்களை ஈன்று கொண்டிருக்கின்றன. [பழய காலத்துக் கல்வியில் அர்த்த புஷ்டியிருந்தது. அந்தக் கல்வி குடுமியுடன் வாழச் செய்தது. இந்தக் காலத்துக் கல்வி கேசங்களைக் கத்தரித்து மொட்டை யடித்துக் கொள்ளச் சொல்லும் வெளி அழகில் உள்ளது. ப-ர்.]

887. ஒரு காலத்தில் நமக்கு உல்லாசமாய்த் தோற்றிய நகரோ இன்று வெறுப்பாகத் தோன்றுகிறது. ஒரு காலத்தில் நமக்கு உண்மையாகத் தென்பட்ட மனிதர்களின் மேல் இன்று அன்பும் திருப்தியும் ஏற்படக் காணோம். பழகப் பழக நாம் அதில் சேறிப்புதிய அநுபவத்தையும்உண்மை யான உலகின் தன்மையையும் கண்டு பிடித்து விடுகிறோம். [எல்லாம் கால சக்கரச் சுழற்சி கற்பிக்கும் பாடம் தான். காலங்கள் நிகழ நிகழ புதிய புதிய தெளிவும் அறிவும் எதிர்படுகின்றன. ப-ர்.]

M. P. குருசாமி நாடார்.

## காரிய முடிவுக்கு முன்னே உளருதே.

ஒரு சங்கதி நிறைவேறுகிற பாகம் நடு மத்தியில் கிடக்கையிலேயே அது முடித்து விட்டது போலவாவது, கட்டாயம் முடிந்துவிடும் என்று நினைத்தாவது அந்த சங்கதியின் சம்பந்தமாய் உன் வாய்க்கு வந்ததை யெல்லாம் உளறிவிடாதே. நிச்சயமாக நானே ஜெயிப்பேன் என்று வாய்விட்டுச் சொல்லிக் கொள்ளாதே. அவ்விதம் சொல்வதானது அந்தக் காரியம் முடியாமற் போகும்படியும் செய்து விடலாம். அந்தக் காரியத்தைக் கெடுக்கப் பலர் உனக்கு எதிரிடையாய் வந்து கூடிக்கொள்ளும்படியும் ஆகிவிடலாம். ஆகவே, காரியம் முடியும் வரையில் உன் வார்த்தைகளை இழுத்துப் பிடித்துவை. உன் வார்த்தைகளால் பிறர் விஷயம் அறிந்துகொண்டு விடும்படி செய்து விடாதே. வாய் மூடி மௌனமாகவே போய் காரியம் முடிந்த பிறகு, இனி என்னை வெல்லுவதற்கு முடியாதென்று நீ பேச ஆரம்பித்தால், அப்பொழுது உன்பேச்சுக்கு அதிக மதிப்பு ஏற்படும். உனக்கு இடர் செய்தோரும் உன்னை இளிச்சவாயனென்றெண்ணினோரும் திகைத்து அடங்கிவிடும்படியாகும். ஆகவே, காரிய முடிவுக்குமுன் கண்டபடி உளறிவிடாதே.

# அறிவின் முன்பு வணங்கிய தன்மை.



அறிவின் துணை கொண்டு உழைக்கும் பெரியாரிடம் உலகம் காட்டும் பணிவின் பான்மை மிக மிக விசித்திரமே. தானே பத்திரிகையின் சொந்தக்காரராயிருப்பினும் தன் கீழ் சம்பளப் பத்திராசிரியராக அமர்ந்துள்ளவரிடம் தான் எஜமானனாகினும் பணிந்து வணங்கியே நடந்து கொள்ளவேண்டியிருக்கின்றது. சம்பளப் பத்திராசிரியரின் அபிப்பிராயப்படியே தனது பத்திரிகையை நடத்திக் கொள்ளுமாறு அவர் பிரியப்படி விட்டு விட வேண்டி வருகிறது. அவருக்குத் தான் சம்பளம் தந்த போதிலும் அவருக்கு அடங்கியே போக வேண்டியிருக்கிறது. தன் வீட்டிற்கு வரும் புரோகிதர் தன்னிடம் தானம் (பிச்சை) வாங்குகிறவரேயாயினும் அவரை உயர்ந்த பீடத்தில் உட்காருவித்து வணங்கி அவர் சொற்படி மந்திரங்கள் கிரியைகள் செய்து அவருக்கு அடங்கி நடக்க வேண்டியதாகிறது. தன்னிடம் சம்பளம் பெற்றுத் தன் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கிறவ ராயினும், அவர் உபாத்தியாயர்என்ற மகா பதவியில் இருப்பதால் அவர் வந்ததும் எழுந்து வணங்கி மரியாதை செய்ய வேண்டி வருகிறது. தன் குமாரனை அவர் கண்டிப்பினும் அடிப்பினும் பதில் பேசாமல் அவற்றை யெல்லாம் பொறுத்துக் கொள்ளும்படி யாகிறது. தன்னிடம் கூலிச் சம்பளம் பெறுகிற வாத்தியார் தானே என்று அவரை அதிகாரம் செய்வதற்கில்லை. வாத்தியாருக்கு அடையாளம் அவர் கையில் ஒரு பிரம்பு என்றபடி தன் அருமைக் குமாரனை அடிக்கும் சுதந்திரத்தோடு அவர் நின்ற போதிலும் அவருக்கு முன் வணங்கியே செல்ல நேருகிறது. நமது கக்ஷியை எடுத்துப் பேசி வழக்காட வேண்டிய வக்கீல் நம்மிடம் வக்கீல் பீஸ் ஆகிய கூலி பெற்றே வேலை செய்கிறாரா ராயினும், நாம் கூலி கொடுக்கிறோமென்று கர்வித்து நம்மை எஜமானனாக நினைத்துக் கொண்டு அந்த வக்கீலை அதிகாரம் செய்ய முடிகிறதில்லை. அந்தவக்கீலின் வீட்டில் அடிமைபோல் காத்துக் கிடக்கும்படியாகிறது. அவர் இடும் கட்டளைகட்கு உட்பட வேண்டி வருகிறது. நம்மிடம் கூலி பெற்றுக் கொண்டு நமது வீட்டு வாசல் தேடி வந்து மருந்து தருகிற வைத்தியர் நாம் வைத்த சம்பள ஆள் போன்றவரே யாவார். ஆயினும், அவரை சம்பளம் தருகிறோமே யென்று அதிகாரம் செய்ய முடிகிறதில்லை. அரசனாக இருந்த போதிலுங்கூட வைத்தியருக்கு உட்பட்டு அடங்கியே நடந்து கொள்ளும்படி யாகிறது. உப்பில்லாப் பத்தியமும் இரு என்று வைத்தியர் கட்டளை யிட்டு விட்டால் அப்படியே பயபக்தியுடன் நடக்க வேண்டியிருக்கிறது. அறிவிற் சிறந்த மனைவி தன் யோசனைகளைச் சரியல்ல வென்று மறுத்துப் புத்தி கூறினால், கேவலம்

---

பத்திராசிரியருடைய நட்பு இருந்தால் தங்களுக்கு இலவசத்தில் பத்திரிகை கிடைக்குமென்று சிலர் நினைக்கிறார்கள். அவ்விதமே பெறுகிறார்கள். சிலர் 1½ ரூபா சந்தாவுக்கு ஒரு ரூபாயும், ஒரு ரூபா சந்தாவுக்கு 12-அணாவும் செலுத்திப் பத்திராசியரின் காலில் வீழ்ந்து கெஞ்சுகிறார்கள். இத்தகையோர் குடி, தாஸி, காபி ஹோட்டல் இவற்றிற்குச் செலவிடப் பின்வாங்குவதில்லை.

ஒரு பெண் கட்டைதானே யென்று அவமதிக்க முடியாமல் அந்தப் புத்தி மதியை ஏற்று அடங்கி சந்தோஷத்துடன் நடக்கும்படியாகிறது. தன் மனைவி தானே என்று தாழ்த்த முடிகிறதில்லை. நமது குமாரன் நமக்கு முன் சிறு பயலாகத் தோன்றினும்; அவன் கல்வி கற்றுப் பண்டிதனான பின்பு அவன் ஒரு விஷயமாக இப்படித்தான் அதைச் செய்ய வேண்டு மென்று கூறினால், தந்தையாயிருப்பினும் கூட அவனுக்கு அடங்கியே நடந்து கொண்டு அவன் இஷ்டப் படி விடும்படி யாகிறது. தன்னிடம் சம்பளம் பெறும் குமாஸ்தாவாயினும் அவர் அறிவிற் பெரியோராயிருப்பின் அவருக்கு அதிக கௌரவம் தந்து அவர் சொல்லுக்கு உட்பட்டே நடந்து கொள்ள வேண்டி யிருக்கிறது. தன் வேலைக்காரனே யாயினும் அவன் ஒன்றில் அநுபோக அறிவாளியாகில் அந்த ஒன்றின் சம்பந்தமாக அவனை யோசனைக் கேட்டு அவன் அபிப்பிராயத்தை யறிந்தே அதற்கு இணங்கித் தான் செய்ய வேண்டி வருகிறது. ஆ! அறிவின் பெருமையே பெருமை! கல்வி யறிவின் துணைகொண்டு பணி புரியும் பெரியாரிடம் உலகினர் அவருக்குச் சம்பளமும் கூலியும் தந்த போதிலும் அவரை வணங்கியே நடந்து கொள்ளும் தன்மை நினைக்க நினைக்கப் பெரும் வியப்பே யன்றோ?

## பரஸ்பரம் காண முடியவில்லை!

அவர்களின் மீது தனக்கு எவ்வளவோ அன்பு. சிறு பருவ விளையாடலிற் கலந்து மகிழ்ச்சி தந்த மறக்கொணாத அன்பின் களஞ்சியங்களு மாவார். இருவரும் சந்தித்துக் கொண்டால் எவ்வளவோ பேசி ஆநந்திக்கலாம். பழய ஞாபகங்களை யெல்லாம் சொல்லித் துள்ளிக் குதூகலிக்கலாம். மறைந்துவிட்ட பலரது பெயர்களை யெல்லாம் கூறி அவர்கள் அந்த நாளில் செய்த காரியங்களை யெல்லாம் பேசி உற்சாகப் படலாம். இருவர் மனமும் ஒன்றுகலாம். என்ன செய்யலாம்! சந்திக்கப் பிராப்தமில்லை. காணவோ வெகு ஆவல். என்றுவது ஒரு போழ்து கண்டு உல்லாசப் பட வேண்டு மென்றும், தன் சிறு பருவத்தோழனின் மனைவி மக்களைக்கண்டு இன்புற வேண்டு மென்றும் வாயூறுதல் கொஞ்சமா? கடைசியில், அந்தச் சிறுபருவத் தோழன் இறந்து விட்டதாகக் கடிதம் வருகிறது. கதறியழ நேர்கிறது. இனி புறப்பட்டுப்போய் யார் முகங் காண்பதென்றும், எல்லா முகமும் தனக்குப் புதிதே என்றும் போகாமல் நின்று விடுகிறான். பிரிந்த இருவர் பரஸ்பரம் காண எவ்வளவோ தாக மிருந்துங்கூட மறுபடி சந்திக்க முடியவேயில்லை. வயிற்றுப்பாடே பெரிதாகி, புறப்பட ஒழிவு நேரம் வாய்க்காமலே போய் ஏமாறும் படியாய்விடுகிறது!




## தந்தை சொன்ன புத்திமதி.

---



என் அன்புள்ள பாப்பா! படிப்பிலே உள்ள ருசி வேறு எதிலும் இல்லை. நீ இப்பொழுது கஷ்டப் பட்டுப் படித்துக் கொண்டால் பெரிய பெரிய புஸ்தகங்களை எல்லாம் வாசிக்கலாம். எவ்வளவோ அற்புதமான கதைகளை ஆநந்தமாய்ப் படிக்கலாம். நன்றாகப் படித்த பெண் என்று உன்னை அனைவரும் கொண்டாடுவார்கள்.

2. என் கண்மணியே! என்னிடம் எவ்வளவோ புஸ்தகங்கள் இருக்கின்றன. பணம் கொடுத்தாலும் இப்பொழுது அவைகள் எங்கும் அகப்படாது. ஒவ்வொரு புஸ்தகமும் மிக்க அருமையானது. நீ உன் பாடங்களைச் செவ்வையாக இப்பொழுது வாசித்து வந்தால், அந்தப் புஸ்தகங்களை எல்லாம் பிறகு சுலபமாய்ப் படிக்க முடியும்.

3. இப்பொழுது நீ உன் பாடத்தைக் கவனியாமல் பெட்டியைத் திறந்து பெரிய கதைப் புஸ்தகம் ஒன்றை எடுத்துப் பார்க்கிறாய். அதைக் கொஞ்சம் படிக்கிறாய். ஆனால், அதிலுள்ள விஷயங்கள் உனக்கு விளங்கவில்லை. ஒன்றும் தெரிய வில்லையென்று புஸ்தகத்தை மூடி விடுகிறாய். ஏன் தெரியவில்லை? உனக்கு இப்பொழுது படிப்பு கொஞ்சம் தான். அதனால் அப்புஸ்தகத்திலுள்ள விஷயங்கள் உனக்குத் தெரிய வில்லை. இது உன் தப்பிதமா?—புஸ்தகத்தின் தப்பிதமா? உன் தப்பிதம் தான்.

4. ஆனதால், நீ நாள்தோறும் தொடர்ந்து படிக்க வேண்டும். ஒவ்வொரு பதத்துக்கும் அர்த்தம் அறிந்து மனப்பாடம் செய்ய வேண்டும். பள்ளிக்கூடத்தில் படிப்பது மட்டும் போதாது. வீட்டில் சாயந்திரம் ஆறு மணிமுதல் எட்டு மணிவரை படிக்க வேண்டும். அதிகாலையில் ஐந்து மணிமுதல் ஏழு மணி வரை படிக்க வேண்டும்.

---

கடியாரம் இல்லாமல் விடியற்காலத்தில் 4-மணிக்கு எத்தனையோ பேர் எழுந்து தத்தம் வேலைகளைச் செய்கிறார்கள். வீட்டில் கடிகாரமிருந்தும் நித்திரையை விட்டுவிட மனமற்ற தூங்குமூஞ்சிகளின் தொகை சொல்லப் போமோ?

இதோ படிக்கிறேன், அதோ படிக்கிறேன், பிறகு படிக்கிறேன் என்று படிக்காமலே என்னை ஏமாற்றுகிறாய். படிக்காத நஷ்டம் உனக்கே தவிர எனக்கு அல்ல. நீ நாளைக்குச் சுகமாக இருப்பதற்கே உன்னை இப்பொழுது படிக்கச் சொல்லுகிறேன்.

5. ஒரு கதையை ஒருவர் வாயால் சொல்லுவதைக் கேட்டு நீ சந்தோஷப் படுகிறாய். அதில் அவ்வளவு ருசியில்லை. அந்தக் கதையை நீயே புஸ்தகத்தில் வாசித்தால், கேட்டதை விட எவ்வளவோ அதிகமான ருசியாக இருக்கும். கதைகளைப் படிப்பதில் ஆசை உண்டாகி விட்டால், பிறகு படிப்பு தானாகவே பெருகி விடும். அப்படிக் கதைகளைப் படிப்பதற்கு, இப்பொழுதுள்ள உன் கொஞ்சமான படிப்பை நீ அதிகப் படுத்திக் கொள்ள வேண்டும். பழைய பாடத்தைத் திரும்பப் படித்தால் அதுவே புதிய பெரிய பாடம்.

6. அதிகமான படிப்பு எப்படி வரும்? நாள்தோறும் கஷ்டப் பட்டுப் படித்து வந்தால் நீ வாசிப்பில் தேர்ந்து விடுவாய். எனக்காக நீ படிக்காதே. உனக்காக என்றே நீ வாசிக்க வேண்டும். உன் பசிக்காகவென்று அன்னம் புசிக்கிறாயல்லவா? அது போல, நீ கல்வியில் தேற வேண்டுமென்று எண்ணி உனக்காகவே நீ படி. அன்றன்று பாடங்களை என்னிடம் ஒப்புவித்து விட்டு, புதுப் பாடங்களை என்னிடம் கேட்டுக் கொள்ள வேண்டும். அதை மறுநாள் தவறாமல் ஒப்புவித்து விட்டு வேறு பாடம் கேட்டுக் கொள்ள வேண்டும். இன்று நான் சொல்லித் தந்த பாடத்தை நாலு நாள் கழித்து ஒப்புவிப்பதில் பிரயோஜனமில்லை. என்னை ஏமாற்றாமல் நீ நன்றாகப் படி. நீ கேட்கிற நகைகளை யெல்லாம் நான் செய்து போடுகிறேன். என் கண்மணியே! நீ படித்த பெண்ணாய் சுகமாக வாழ்க.

## வியவகாரம் கொண்டு வருதல்.

சிலர் நம்மிடம் வரும் தோழனையைப் பார்க்கும் பொழுதே நமது மனதில் அச்சம் உதிக்கின்றது. அவர்கள் வந்ததும் ஒரு விவகாரப் பேச்சைத் தொடங்குகிறார்கள். "உன் சங்கதிக்கு அவர்கள் ஆக்ஷேபம் செய்கிறார்களப்பா."—"நீ சொல்லியதற்கு அவர்கள் இவ்விதம் பேசுகிறார்களப்பா!"—" அவர்கள் என்ன சொல்லுகிறார்களென்றால் "—என்று இவ்வாறாக விவகாரப் பேச்சுகளை ஆரம்பிக்கிறார்கள். நமது மனதின் சமாதானம் கெட்டு வெகு கவலையும் ஏக்கமு முள்ளவர்களாகிறோம். விவகாரம் கொணர்வோரைக் காணும் பொழுதே நெஞ்சு திடுக்கிடுகின்றது.




# ஓர் கற்பரசியின் முறையீடு.

வையமிதில் பெருந்துணையாய் மதித்திருக்கும்
உயிர்த்தலைவ ! வாழ்வுதன்னில்
ஐயமறக் கேட்டதுவும் அருநூல்கள்
ஓதியதும் அந்தோ ! எங்கே
எய்தினகொல் ? அறிவுரைகள் இயம்பி
இழிசெயல் புரிதல் ஏற்பதேயோ ?
வெய்ய துயர் உற என்னை விடுத்திரவில்
வேசி மனை விழைதல் நன்றே ? (க)

அழகிய நம் குடும்பம் இனி அலங்கோல
மாகிடவும் ; அகன்ற நந்தம்
பழய இன்ப வாழ்வை எண்ணிப் பரிதவித்து
யானழவும் பார்த்து நிற்றல்
அழகுகொலோ உமக்கினியும் ? அறநெறியை
நனி உணர்ந்தும் அந்தோ ! இந்நாள்
பழகிடும் உம் தோழர்களால் படைத்த பயன்
இதுவேயோ ? பண்பு எங்கேயோ ? (உ)

வாழ்விலே எய்திடுபல் வருத்தமெலாம்
என் பங்காய் மகிழ்வோ(டு) ஏற்று
தாழ்விலே வினைதுயரம் தனை உணரா
வணம் உமக்குச் சாதமூட்டி
வாழ்வில் நீர் மகிழ்ந்திருக்கும் வகை நடந்து
கொண்டதெலாம் மறந்தீர் கொல்லோ?
ஊழ்வினையின் கொடுமையையும் ஒடுக்கி
விடலாம், முயற்சி உயர்ந்ததாயின் ! (௩)

நீரொருவர் மகிழ்ந்திருக்க நேர்வதுவே
போதுமெனும் நினைவு கொண்டேன் !
ஆரொருவர் உயர் தெய்வம் ? அவர் நீரே
யாகுமென அகத்திற் கொண்டேன் !
ஓரொருகால் நீர்சீற்றம் உற்றிடில் யான்
எதிர்த்தறியேன் ; ஒடுங்கி நின்றேன் !
சீரொருமை ஒன்(று) உன்னி சேர் துயரம்
பல மறந்தேன் ; சிந்தை குன்றேன் ! (௪)

எத்தனையோ அடிகளையும் இன்னாத
மொழிகளையும் ஈந்தபோதும்
சித்தம் வெறுத்தேன் அல்லேன்; செல்வரே!
ஈதறிவீர்; சினத்தினாலே
மெத்த துயர் விளைத்திடினும் விழைந்து
தழுவியபோது விசனம் நீங்கிச்
சித்தம் மிகக் களித்ததுண்டு; சினத்தினளாய்ச்
சபித்தறியேன்; தெரிவீரெல்லாம்! (ரு)

கேட்டபோ தணிகளெலாம் கேள்வ!
நினக் கீந்ததிலே கிளர்ச்சியன்றி
வாட்ட மடைந்தே னல்லேன்; மதிக்கவொணா
மணி உமையே மதித்திருந்தேன்!
ஆட்டமெலாம் ஆடுகின்றீர்! அடியேனை
மறந்தீரோ? அன்பே! முன்போல்
நாட்டமொன்றாய் ஆனந்த நல்வாழ்வைச்
சிறக்க இனி நடத்துவோமே! (சா)

இறைவன் நீர்; துணைவன் நீர்; இன்பத்திற்(கு)
இருப்பிடம் நீர்; எனக்கிரங்கிக்
குறை—களையும் அரசனும் நீர்; கூறும் முறை
யீட்கட மனம் கொள்ளீராயின்,
முறையிடல் வேறெவர் பாலோ? மொழிபுகல்
மற்றெவரேயோ? முகம் மலர்ந்து
அறைய ஒரு மொழி இன்றோ? அடியள் துயர்
உணரீரோ? அன்பில்லீ ரோ? (எ)

உத்தம நற் கற்பினரை உள்ளநாள் வரை கதற
உறுவித்தோர் பின்,
சித்தம் இரங்குவர் தமக்குச் சிலரும் இலராக
நடுத் தெருவில் நின்று
மெத்த துயர்பட்(டு) அலையும் விதமின்றும்
பலவிடத்தும் விளைவதன்றோ?
உத்தமரே! அதனை நினைவூட்டிடவோ?
கருணையேன்மேல் உறவதென்றோ? (அ)

ஆரியூர் – வ. பத்மநாப பிள்ளை.

---

வேலைக்காரர்கள் எவ்வளவு அருமையாக வேலை செய்தாலும் அதைக் குறைப் படுத்தியே பேசும் எஜமானர் முன்பு ஸந்தோஷம் அனுபவிக்க முடியாது. ஆனால் கடவுளின் முன்னிலையில் தமது பரிசுத்த உழைப்புக்கு ஆநந்தம் கொள்ளலாம்.

# வாஸவதத்தை



உலகத்தில் மனிதனுடைய மனத்தைத் துன்பப் படுத்தும் பல விஷயங்களில் ஸ்திரீ மோகமென்பதொன்று. இதனால் அநேக புத்திமான்களுங் கூட துர்வியாபாரத்தில் பிரவேசிக்க முயல்வார்கள். ஸாமான்ய மனிதர்கள் ஸௌந்தரிகளின் வதனத்தில் தங்கள் மனதையும் கண்களையும் நாட்டி முடிவில் கெட்டலைந்து நாச மடைகிறார்கள். இது பிரத்யக்ஷானுபவமாயிருக்கிறது. ஸ்திரீ பாசத்தைத் துறந்து கடவுளின் பாதாரவிந்தத்தில் மனதைச் செலுத்தி ஸத்கால க்ஷேபம் செய்யும் உத்தமர்கள் இக்காலத்தில் சிலரே எனலாம். ஏதோ ஒருவித ஆசையால் தங்கள் மனதை நோகச் செய்து, அவ்வாசையைப் பூர்த்தி செய்து கொள்ளப் பலவித திரவியச் செலவுகளைச் செய்வர். உலகத்தில் ஸகல விஷயங்களிலும் உத்தமனைப் பிரகாசிக்கும் மனிதன் அகப்படுவது அரிது. அவ்விதம் இருப்பினும் அவன் வசசரியாயிருப்பான். நாடு நகரங்களில் பிரவேசியான். ஸ்திரீகளின் ஸவுந்தரியம் சில நாளைக்குள் அழிந்து போவது நிச்சயமாயினும் அவர்கள் அதை யுணராமல் அகங்காரிகளாய் யோகிகளையுங் கூடத் தங்கள் மாயவலைக்குள் சிக்கும்படி செய்கின்றனர். இதற்கொரு உப கதை கூறுவோம்.

ஃ

பூர்வத்தில் மதுரை என்னுமிடத்தில் அதிக ஸவுந்தரியவதியான ஸ்திரீயிருந்தாள். அவள் பெயர் வாஸவதத்தை. இவள் ஒரு நாள் தனவான் மகனொருவனைக்கண்டு ஆசைகொண்டு தன் ஸகியின் மூலமாய் தன் எண்ணத்தைத் தெரியப்படுத்தினள். தனவான் மகனான உபகுப்தன் ஸகியைத் திரஸ்காரம்செய்து ஓட்டி விட்டனன். உபகுப்தன் மிகவும் புத்திசாலி. சாஸ்திராராய்ச்சி செய்தவன். தெய்வ பக்தன். பௌத்த மதஸ்தனானதால் ஸ்திரீ பாசத்திற் குட்படாமல் முன் போல் தன் மனதை ஸத்விஷயத்தில் செலுத்தலானன். வாஸவதத்தை அடிக்கடி தன் ஸகி மூலமாய் உபகுப்தனை மனம் சோதிக்கச் செய்தும் பயன் படாது போகவே வியஸனமுற்றிருக்கையில், இவளிடம் பொறாமைகொண்ட சிலர் ஒரு அபவாதத்தைக் கற்பித்து நியாயஸ்தலத்துக்கு இவளை இழுத்துக் கொண்டு போயினர். அங்கே நியாயாதிபதி அவள் கைகால்களையும் மூக்கையும் வெட்டி விடும்படி அக்காலத்திய (அ)நீதிபோல் கட்டளையிட அவ்விதமே அதிகாரிகள் செய்து போயினர்.

ஃ

வாஸவதத்தை தன் அவயவ ஹீனத்தையும் கோரத்தையும் பார்த்துப் பார்த்து அழுது புலம்புகையில் அவள் ஸகி சில ஸமாதானங்களைச் சொல்லித் தேற்றினள். இவளுக்கு நேர்ந்த விபத்தை யறிந்த உபகுப்தன் மனம் வருந்தி அவ்விடம் வந்தான். அவனைக்கண்டு வாஸவதத்தை ஹோவென்று அலறி, பிரிய உபகுப்தா! நான் ஸவுந்தர்யவதியா யிருக்கையில் ஒரு தினமாவது என்னைப் பாராதவன் இப்போது அங்கஹீனையாய் அழுது புலம்புகையில் வந்திருக்கிறாயே; உனக்கு இதில் என்ன திருப்தி என்றாள். உபகுப்தன் ஸாந்தமனத்தினனாய்க் கூறுவதானன். "ஸோதரீ, நான் உன்

னுடைய ஸவுந்தர்யகாலத்தில் அதற்கு வசனாகாமலிருந்தேன். பிறகு உனக்கு இப்போதுள்ள ஸ்திதியை அறிந்து கொண்டேன். உன் அழகிய தேகம் மாம்ஸாதிகளாலும் காந்தியினாலும் மூடப்பட்டிருந்தது. ரூபம், ஸம்பத்து முதலியன அநித்யம். அவைகள் அதிக சாஸ்வதமென்று நினைப்பவர்கள் அதிக மூடர்கள். இப்போதாகிலும் விசனத்தை விடு; கர்வ சிந்தனையைத் தூரத்து; கடவுளை நம்பு; இக லோக ஆசையை யறு; உன்னைப் போன்ற ஸுந்தரிகள் பிற்காலத்தில் கெடாதபடி நல்ல மார்க்கத்தைக் கைக் கொள்ளு; சென்று போனதற்கு வியஸனப் படாதே; காமக் குரோதாதிகள் மரணகாலத்தில் ஸகாயம் செய்யா; ராகத்துவேஷாதிகள் ஆபத்துக் காலத்தில் ஆநந்தத்தைக் கொடா; ஸவுந்தரிய லாவண்ய ஸம்பத்துகள் உன்னைத் திருப்தி செய்யா. இவைகளை யெல்லாம் மறந்து விடு; கடவுள் நாமத்தை ஜெபம் செய். உன் மனம் இப்போது என்ன நிலைமையிலிருக்கிறதென்று யோசி; இன்னும் உலகத்தில் நாம் ஜீவிக்க வேண்டு மென்று உன் மனதில் துராசை யுண்டானால் அதை ஞானத்தால் தூரத்து; ஆசையே வியஸனத்துக்கு மூலம்; நான் இதுவரையில் சொன்ன வார்த்தைகள் தெரிந்தனவா?" என்றான்.

ஃ

வாஸவதத்தை புத்தி தெளிந்து உபகுப்தனை நமஸ்கரித்து பகவந்நாமத்தை வாயால் ஜபித்துக் கொண்டு அவனருகில் இருந்தவாறே அதிக ஸந்தோஷத்தோடும் உயிர்துறந்தாள். உலகத்தில் எத்தனைநாள் ஜீவித்தாலும் ஒரு நாள் மரிப்பது நிச்சயம். இதற்குள் நற்பெயரைக் கெடுத்துக் கொண்டு ஸ்திரீலோலனாகத் திரிந்து, அபக்யாதி யடைந்து முடிவில் இறப்பதைக் காட்டிலும், ஸத்கீர்த்தியை நிலை நிறுத்திப் பரோபகாரியாய்ப் பிரஸித்தி யடைந்து பிராணனை விடுவது நன்மையும் மேன்மையுமாகும்.

## தமோறிய தப்புக் கணக்கு.

காலணாவுக்கு இரண்டு எலுமிச்சம்பழம் என்று நினைத்துக்கொண்டே, காலணாவுக்கு ஒரு எலுமிச்சம் பழம் வீதமாகக் கடைக்காரன் தந்ததை வாரிக் கூடையிற் போட்டுக் கொண்டுபோய் விடுகிறான். பிறகு வீட்டில் எண்ணிப் பார்க்கக் காலணாவுக்கு ஒரு பழம் வீதமே இருக்கக்கண்டு திகைக்கிறான். இவ்விதமே, காலணாவுக்கு இரண்டு கோலிகள் என்று எண்ணியபடியே அரையணாவுக்குக் கடைக்காரன் தந்த மூன்று கோலிகளைப் பெற்றுச் சென்று விடுகிறான். பிறகே, நான்கு கோலிகளைப் பெறத்தவறிப் போனது தெரிகிறது. ஒரு சங்கதி முடிவதற்கு முன்பே அந்த சங்கதி தான் எண்ணியபடியே முடிந்து விட்டதுபோல் நினைத்துக் கொள்ளுவதில் நேரிடுகிற பிழையிது.

# பி. ஏ. படிப்பதின் ரகசியம்.

உத்தியோக மின்மையென்ற பேயானது ஆங்கில பட்டதாரிகளான தென்னாட்டுப் பிராமணர்களைப் பிடித்து வருவது யாவரும் அறிந்த ஓர் ரகசியமாகும். அனேக பிராமண மகா நாடுகளில் இதைப்பற்றிப் பரிசீலனை செய்யப்பட்டுத் தலைவர்களாலும் மற்ற அறிஞர்களாலும் "இனி பிராமணச் சிறுவர்களுக்கு ஆங்கிலப் படிப்பே தேவையில்லை; வேதியர்க் கழகு வேதமும் ஒழுக்கமுமாதலால் வேதாப்பியாசம் செய்வது தான் நேர்மையாகும்" என்ற உபதேச மொழிகளும் வழங்கப்பட்டு வருகின்றன.

அப்படியிருந்தும் கஷ்ட ஜீவனம் நடத்தி வரும் அனேகம் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகள் பட்டம் பெறுவதின் நிமித்தம் ஆயிரக் கணக்கில் செலவு செய்து வருவது தடைபடவில்லை. அதற்கு அநேக காரணங்களிருப்பினும் அவைகளில் முக்கியமான சிலவற்றைக் கீழே குறிப்பிடுகிறேன்.

1. காலேஜில் படித்துக் கொண்டிருக்கும் காலத்தில் பையனுக்குக் கலியாணம் ஏற்பாடானால், தாலி கட்டுவதற்கான கூலிப் பணம் ஏராளமாய்க் கிடைக்கும்.

படிப்பு முடிந்த பிறகோ என்றால் 'உத்தியோகமின்மை' என்ற பேயால் பையனுக்கே தாலி கட்டப்பட்டு, கலியாண மார்க்கட்டில் அவனைக் கோருபவர் ஒருவரும் இருப்பதில்லை. அதனால் பலவித தந்திரங்களைக் கையாண்டு படிக்கிற காலத்திலேயே அனேகர் விவாஹத்தை முடித்துக் கொள்ளுகிறார்கள். அதிலும் காலேஜில் சேர்ந்த அதே வருஷத்திலேயே விவாஹமாய் விட்டால் விசேஷ சலுகையுண்டு. எப்படியெனில் படித்து வெளியே வரும் வரையில் ஏற்படும் சகல செலவையும் பெண் வீட்டாரின் தலையில் சுமத்திவிடலாம்.

2. விடு முறை நாட்களில் மாமனார் அகம் சென்று தங்கும் 'காலேஜ் மாப்பிள்ளை'க்கு பிரதி தினமும் நடக்கும் உபசாரங்கள் சொர்க்க போகம் எனினும் தகும். அவை:—

1. காலை ஐந்து மணிக்கு நித்திரையினின்றெழுவதின் நிமித்தம், தன்னுடைய தர்மபத்தினி வீணை அல்லது பிடிலுடன் சேர்ந்து பாடுதல்.

2. பல் துலக்குவதற்கான ஒரு தவலை வென்னீர், பல் துலக்கும் புருஷ் பசை முதலிய சாமான்களுடன், தன் குழந்தை மனைவி எதிரில் நின்று கொண்டு வேண்டுதல்.

3. ஆறு மணிக்கெல்லாம், கால் சேர் நெய்யை விழுங்கிய இரண்டு இட்டலிகளைத் தாங்கி நிற்கும், சிறு அழகிய வெள்ளித் தட்டும், திக்கான கோக்கோவை தன்னுள் வைத்துக் கொண்டிருக்கும் வெள்ளிக் கூஜாவும்

---

எப்பொழுதும் பகவானுடைய நாமாவளியை உச்சரித்து, ஸ்வ ஹிதார்த்தத்தைக் கோருவதோடு கூட, அந்நியருடைய அபிவிர்த்தியையும் கோரிப் பகவானைப் பிரார்த்தனை செய்வது நலம். அது சித்தம் சுத்தியாவதற்கு வழி.

முறையே தங்கள் காணிக்கைகளைச் சமர்ப்பித்தல்.

4. 10-மணிக்கு, அன்றே புதிதாய் வெண்ணெய் உருக்கிக்காய்ச்சப்பட்ட கால் சேருக்குக் குறையாத நெய், காலையில் தயார் செய்யப்பட்ட புளிப்பில்லாத கெட்டித் தயிர் அரைப்படி இவைகளுடன்கூடின ம்ருஷ்டான்ன போஜனம்.

5. உண்ட களை தீர்ந்து எழுந்த சிறிது நேரத்திற்கெல்லாம் (ஹல்வா அண்ட் போண்டா) (கேஸரி அண்ட் பஜ்ஜி) (ஜாங்க்ரி அண்ட் காரப் பகோடா) போன்ற தினுசில் ஏதாவது ஒரு பிளேட்டும் காபீ, டீ, கோகோ, அல்லது, 'ஸிரப் அண்ட் மில்க்' இவைகளில் ஏதாவது ஒரு கப்பும் எதிரில் தோன்றும்.

6. இரவு 7-மணிக்கு வறுவல் சட்னி, மைசூர் ரஸத்துடன் கூடின சொகுஸான ஸாம்பார்.

7. படுக்கைக்குப் போகும் போது படித்து வறண்ட தொண்டைக்குப் பசையாக, நான்கு சேர் ஒரு சேராகச் சுண்டும் வரையில் காய்ச்சப் பட்டு ஜீனிகல்கண்டு, குங்குமப் பூ, ஏலக்காய்முதலியதும் தங்கரேக்கும் கலந்த பசும் பால் ஸமர்ப்பிக்கப் படுதல். இன்னும் பல பல...

மாப்பிள்ளை படிப்பு முடிந்து, வேலையின்றி திண்ணைத் தூங்கி உத்தியோகத்திலமர்ந்து,முகக்ஷவரக்கத்திடாய்லட் பேபர், ஆறணு சிறு கதைப் புத்தகங்கள், வாஸ்லேன்,சுருட்டுடப்பி முதலியவைகளுக்கும் மாமனுரிடமிருந்து வேண்டிய பணம் கிடைக்குமென்றால், எந்தப்பிள்ளை தான் பி. ஏ. பட்டம் பெறுவதற்காக காலேஜில் படிக்காமலிருப்பான்? எந்தப் பெற்றோர்தான் படிக்கவைக்காமலிருப்பர்? பெண்ணைப் பெற்றோர்களுக்குத் திண்டாட்டமும் பீ. ஏ. பட்டதாரிக்குக் கொண்டாட்டமுமே. இதற்கு ஏதாவது விமோசனம் கிடைக்குமா?

தருகாமாக்ஷி அம்மாள்.

---

## அபிப்பிராயத்தை அடக்கிவிட முடியாது.

ஒருவன் கொண்ட அபிப்பிராயத்தை நிர்ப்பந்தத்தினுல் வெளிவராமல் அடக்கிவிடச் சிலர் முயலுகிறுர்கள். அந்த அபிப்பிராயம் மற்றவர்களுக்கு எட்டாதிருக்கவும் வெகு எச்சரிக்கையோடு காவல் செய்கிறுர்கள். கடைசியில் அந்த அபிப் பிராயந்தான் எவ்விதமோ வெளியில் வந்து பஹிரங்கப்பட்டு விடுவதுடன், அந்த அபிப்பிராயமே சரியானதென்று பலர் கொள்ளவும் தொடங்கி விடுகிறுர்கள். அபிப்பிராயத்தை வெளியிட்டவனைக் கேவலப்படுத்தி அவனது அபிப்பிராயத்திற்குக் கௌரவமில்லாமற் போகும்படி முயற்சித்தாலும், முடிவில் அந்த அபிப்பிராயத்துக்கும் அவனுக்குமே நல்ல மதிப்பு ஏற்படுகிறது. அதை வெளிவராமல் தடுத்தவனுக்கோ இறுதியில் கெட்ட பேர் தான்.




## 3. இல்லறம்.

(207-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 233. "தன் பெண்ஜாதியைத் தானடிக்கத் தலையாரியைச் சீட்டு கேட்கிறதா?"



ஒரு பெண்ணின் மீது ஒருபுருஷனுக்குள்ள சுதந்திரத்தை இப்பழமொழி எடுத்துக் காட்டுகிறது. பெண்களை எவ்விதமாயும் நடத்த அவளைக் கொண்ட புருஷனுக்குஸர்வாதிகாரமுண்டு. அதற்கு ஒரு பெரிய இடத்து உத்தரவுவேண்டியதில்லை யென்றும், மனைவியிடத்தில் அதிகாரமானது எல்லா முகமாயும் செல்லுமென்பதும் இப் பழமொழியின் கருத்து. சாதாரண கருத்து இதுவானாலும் பலவித சந்தர்ப்பங்களிலும் இப் பழமொழி பிரயோகமாகின்றது. தானே கஷ்டப்பட்டுச் சம்பாதித்துச் செலவிடுகையில், அந்த இந்த செலவுகள் செய்யலாமா வேண்டாமா வென்று ஒருவரைப் போய்க் கேட்டுத்தான் நடத்த வேண்டுமென்பதில்லை யென்றும், தன் சொந்தப் பணத்தை எவ்விதமாகவேனும் செலவிடத் தனக்கு சுதந்திரமுண்டாதலால் அதைப் பற்றி எவரும் தனக்கு எதுவம் சொல்ல வேண்டியதில்லை யென்றும் ஒருவன் கூறும் பொழுது இந்தப் பழமொழியை ஒருமேற்கோளாக உபயோகித்துக் கொள்ளவும் முடியும். தன் சொந்த சங்கதியைத் தான் செய்து கொள்ளுகையில் தன் மீது உண்மை யன்பற்ற வேஷ நடிப்புக்காரர்களிடத்தில் தான் எதையும் கேட்கவேண்டிய தில்லை யென்றே தன் மனதிற்குப் படும். அவ்வித சந்தர்ப்பங்களில் இப் பழமொழியும் அவனுக்கு ஒரு துணையாகிக் கொள்ளும்.

ஃ

மனைவியை யடிக்கப் புருஷன் சுதந்திரம் பெற்றிருக்கிறானென்று இப் பழமொழி கூறுகையில் அவ்விதம் அடிப்பது சரியா என்பதும் ஒரு கேள்வியாகிறது. மனைவியை ஒருபுஷ்பத்தாலுங் கூடத் தீண்டாமல் மேன்மையாக வைத்து நடத்தித் தாங்களும் மேன்மையான வாழ்விலிருந்து காலத்தை முடித்துக் கொண்ட கண்ய சிரேஷ்டர்களும் உலகில் இருக்கிறார்கள். அவர்களுடைய உத்தம குணத்துக்குத் தக்கபடி உத்தமிகளான மனைவியரை யடைந்ததும் அவர்களின் பெரிய பாக்கியமே. அதிக கல்வியும் விசால ஹிருதயமும் பெருந்தன்மையான குணங்களும் வாய்க்கப் பெறாத சிலர் அல்பகாரியத்துக்கும் தம்மனைவியரை அடிப்பதே தொழிலாகி விடுகிறார்கள். நன்கு கற்றவர்களுக்கு எதுங் கல்லாத மடவார் மனைவியராக அமர்ந்து, தங்களின் அவிவேகத்தால் புத்திமான்களான அன்னோரை எதிர்க்கையில், எவ்வளவு ஹிதகரமாய் நல்ல புத்திகள் சொல்லியும் பயனற்றுப்

போனது கண்டு பிறகு தடிப் பிரயோகத்திற்கு அவர்களும் துணிந்து விடுகிறார்கள். அந்த அடிப்பிரயோகத்தாலேயே அவர்களை அடக்கியாளும்படியும் நேரிட்டுவிடுகிறது. அப்பொழுது தாங்கள் படித்த படிப்பையும், தாங்கள் மனைவியரை அடிக்க நேர்ந்த விதிவசத்தையும் நினைத்துக் கொண்டு வெந்து செந்தணலாகிறார்கள். சில இடங்களில் கணவன் மனைவியை அடிக்க, எவ்வளவு அடித்தாலும் அவ்வளவு அடிகளையும் அவள் பட்டுக்கொண்டு "இன்னும் அடியடாபாவி! கதியற்றவனே, சண்டாளா" என்று வாய்க்கு வந்தபடி பேச ஆரம்பித்து விடுகிறார்கள். அப்பால் தங்கள் கணவனையே அடிக்கவும், எதிர்க்கவும், கிள்ளவும், கடிக்கவும், உதைக்கவும், எச்சில் துப்பவுமாய்ப் பெரிய இராக்ஷஸிகளாய் ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள். இவற்றைக் கண்ட புருஷர்களுக்கோ இதற்குமேல் கோபம் பொங்கித் தங்கள் கையில் அகப்பட்ட கட்டை, துடைப்பம் யாவற்றையும் கொண்டுதங்கள்பலமெல்லாம்சேர்த்து பெரிய பூஜை செய்து விடுகிறார்கள். இந்த சந்தர்ப்பத்தில் இந்தக் கணவன்மாருக்கும் சொந்தபுத்தியிருப்பதில்லை. அந்த மூடப்பெண்களுக்கும் நிதானிக்கும் தன்மை உண்டாவதில்லை. அப்பொழுதே குடித்தனம் தாறுமாறாகி உடைந்து தீர்ந்து விடப் போவது போல பெரிய குழப்பமாகி விடுகிறது. கையில் அகப்பட்டவற்றையெல்லாம் மனைவி கணவன்மீது வீசி எறிகிறாள். அவ்விதமே கணவனும் தன்னை முற்றிலும் மறந்து தன் ஆத்திரத்தில் எதையும் செய்து விடுகிறான் மனைவியோ இவ்வளவு கூத்தும் செய்து விட்டு அந்தத் தெருமுழுதுக்கும் கேட்கும்படியாகக் கனத்த கூச்சலிட்டு அழத் தொடங்குகிறாள். அவள் போடுகிற சப்தத்தைக் கேட்டு ஜனங்கள் கூடி விடுகின்றனர். அவர்கள் முன்னிலையில் மனைவி கண்டபடி கணவனைத் தூற்றி அவன் மானத்தைப் போக்கி வெகு கேவலப் படுத்தி விடுகிறாள். கணவனுக்கும் ஆத்திரம் பொங்கிக் கொண்டு பதிலுக்குப் பதில் சொல்லி அடிக்கவும் போகிறான். இது மற்றவர்களுக்கு ஒரு தமாஷான வேடிக்கையாயும், குளிர்ந்த கண்காட்சியாகவும் இருக்கிறது. புத்திமான்களான பெரியவர்கள் இருவருக்கும் மத்தியஸ்தம் செய்து, விசேஷமாய்ப் புருஷனை அடக்கி அவனை நிதானத் தன்மையில் திருப்பி, "அதது அப்படியப்படித் தான் இருக்கும், அதை யெல்லாம் மனதில் வைத்துக் கொண்டு உருப்படியாயுள்ள ஒரு குடித்தனத்தை வீணாக்கிக் கொள்ளாதே" என்று இடித்துரைத்து அவனைத் தூரத்தில் விலகச் செய்து, மனைவிக்கும் சாந்தமாகவும் அவள் பக்கமே பேசுவது போலவும் நின்று சமாதானப் படுத்தியும் கண்டித்தும் ஒருவித சமரஸத்தை யுண்டு பண்ணுகிறார்கள். இவ்வளவில் கொலை, காயங்கள், முதலியன நேராமலும், போலீஸாரால் கைதியாகாமலும் கணவன் தப்பித்துக் கொள்ளும்படி கடவுள் செய்கிற கிருபையையே எல்லாவற்றிலும் மேலானதாகச் சொல்ல வேண்டும். அவரவர்களின் ஜாதகத்திலேயே, நல்ல மனைவி, நல்ல புருஷன் கிடைப்பானென்பதும், அவ்விதம் கிடைக்காமல் துஷ்டனும் துஷ்டையுமே வாய்ப்பார் களென்பதுங் கூடக் கண்டிருக்கிறதாம். அதற்குத் தக்கபடியே அமைப்பும் பொருந்துகின்றதாம்! இவ்வித எதிர்ப்புப் போராட்டத்தில் மனைவியை அடிக்கக் கூடாதென்கிற விவேகம் உண்டாக நேரம் வாய்ப்பதில்லை. நன்கு படித்தவர்களின் சங்கதியே இவ்வாறாயின், மற்றவர்களைப் பற்றி விவரிக்க வேண்டியதில்லை. கலகம் நடந்த அன்று அடுப்பில் பூனை தூங்குகின்றது. குழந்தைகள் முதல் யாவரும் பட்டினியாக

வும் நேர்கிறது. ௸

சில குடும்பங்களில் கணவனும் மனைவியும் நாயும், பூனையும் போலவே வாழ்கிறார்கள். அற்பசங்கதிகளி லெல்லாம் பெரிய ஓசை கேட்கின்றது; வார்த்தைகள் மீறுகின்றது; அடிதடிப் பிரயோகம் நிகழ்கின்றது. புத்திசாலியாயுள்ள சில ஆடவர்கள் தங்களின் மனைவி ஒரு அற்ப சங்கதிக்காக மிதம் மீறும்போது, 'என் இன்று வீடு கலகமாக' என்று நினைத்துத் தாமே வலிய மனைவியிடம் சென்று, இந்த அல்ப சங்கதிக்கு ஏன் சண்டை யென்று பேசி, அவள் சொல்வதற் கெல்லாம் சாந்தமாகவே பதில் தந்து, அந்த சமயத்தில் அவள் ரவிக்கையுண்டா, சேலை யுண்டா, நகை யுண்டா என்று ஆரம்பிக்க, அதற்கும் ஒரு சமாதானம் கூறி, இது தானா ஒரு பிரமாதம் பிறகு ஆகட்டு மென்று அந்த வார்த்தையையும் முடித்து அன்றையதினத்துச் சண்டையை நிகழவொட்டாமல் தடுத்து அடக்கி விடுகிறார்கள். அவளும் சமாதான மடைந்து வீட்டு வேலையில் கவனத்தைச் செலுத்தப்போக, ஓ! இன்று ஒரு சண்டை ஆரம்பம் என்று வேடிக்கைப்பார்க்க நினைத்திருந்தவர்களும் ஏமாறி விடுகிறார்கள். சில உத்தம மனைவியர் தங்கள் கணவன்மார் அடித்த அடிகள் தாங்காமல் அவர்களின் கையைக் கடித்து விட்டது முண்டு. அது முதல் அடிக்கும் வழக்கத்தை அந்த ஆடவரும் கொள்ளாது போனதுமுண்டு. சிலபுருஷர்கள் மதுபானப் பிரியர்களாயும், தாஸிலோலர்களாயும் வீட்டின் நினைவில்லாமலே வெளியில் திரிகிறதும், தங்களின் அபிமான ஸ்திரீகளை ஆயிரக் கணக்கான ஆபரணாதிகளால் அலங்கரித்துத் தங்கள் மனைவியர் பழங்கந்தையை யுடுத்து நிற்கச் செய்வது முண்டு. இதில் வயிறு எரிந்த மனைவியர் தங்கள் புருஷரின் அக்கிரமங்களைச் சகிக்க முடியாமல் வாய் விட்டலறித் தெய்வத்தினிடம் முறையிடுவதும், மற்றவர்களிடம் சொல்லி அங்கலாய்ப்பதும், சில சமயங்களில் தங்கள் கணவன்மாரையே எதிர்த்துச் சண்டையிடுவதுமுண்டு. ஆடவர்கள் இவ்விதம் மூடத்தனமாயும் புத்திக்குறைவாயும் நடந்து கொள்வதற்குத் தகுந்த தூண்டுதலான துஷ்டசகவாசத் துணைகளும் அவர்களுக்குக் கூடிக்கொள்கின்றன. இவ்வித சமயங்களில் அடிகளும் கலகங்களும் சாதாரணமாகி விடுகின்றன. விவாகத்திற்கு முன்பு விவாக சுகத்தைப்பற்றி எவ்வளவோ இன்பமான கனவுகள் கண்டதெல்லாம் விவாகமான பின்பு வெகு பேருக்கு அவை வீணாகி விடுவதும் பெரிய பரிதாபமே. இவ்வித அலங்கோலத்திற் சிக்கினோர் மனைவியை அடிப்பது மிக்க இழிவான செய்கை என்பதை நன்குணர்ந்திருந்தும் அந்த எல்லையை மீறி விடுகிறார்கள். இன்னும், பெரியோர்களின் கட்டுப்பாடும் திட்டங்களுமில்லாமல் புருஷனும் மனைவியுமாய் இருந்து வாழும் தனிக் குடித்தனங்களில் இவ்வாறு விபரீதம் நேரில் அடிதடிகள் வானுற வோங்கி விடுகின்றன. "சற்றேனும் ஏறுமாறாயிருப்பாளே யாமாகிற் கூறாமற் சன்னியாசம் கொள்" என்ற ஔவையாரின் வார்த்தையைத் தழுவுவோர் எங்கோ ஒருவர்தான். சன்னியாசியாகிவிடின் சாப்பாடு போடுவோர் யார்? மக்களின் கதி யென்ன என்பது வினா? அந்த குடும்பத்தின் பாசக் கவலை தன்னை விடாத போது சன்னியாசி விடுவதற்கும், தன் குடித்தனம் கெட்டுச் சீரழிவதற்கும் மனம் ஒப்புமா? அவ்விதம் ஒப்பாததினாலேயே எவ்வளவோ சண்டை யிட்ட பிறகுங் கூட அந்த மனைவியுடனே மறுபடியும் குடித்தனம் செய்யத் தொடங்குவதும் பல இடங்களிலும் காணும் அநுபவம்.

# காதலின்பம்



எனதன்புள்ள அத்தான வர்களுக்கு! கடந்த ஒரு மாதமாய்த் தங்களை எதிர்பார்த்துப்பார்த்து ஏங்கி ஏங்கி நிற்கின்றேன். கிடைக்கும் கடிதங்களிலெல்லாம் அடுத்தவாரம் வருவதாய் எழுதி யிருக்கிறீர்கள். அந்த அடுத்தவாரம் என்பது எந்தவாரமோ அறியேன்*****.இக்கடிதம் கண்டவுடனுவது புறப்பட்டு வந்து என் கண்ணும்மனமுங்குளிரக்காட்சியளிப்பீரா? என்பால் தங்களுக்குள்ள அன்பையும் இக்கடிதத்தின் வலிமையையும் சோதிக்க இதுவே சமயமாய் எதிர்பார்த்து நிற்கும் அடியாள்.****

ஃ

இக்கடிதம் கண்ட மறுதினமே மூன்றுநாள் ரஜா வாங்கிக் கொண்டு புறப்பட்டேன். நான் என் காதலியை விட்டுப் பிரிந்தபொழுது அவள் கர்ப்பமாயிருந்தாள். புதுமணம் புரிந்த பூவையைப் பிரிந்திருந்த வேதனை—காதலின்வன்மை—கடிதத்தின் தூண்டுதல்—காண்பதிலுள்ள ஆவல் யாவும் ஒருங்குகூடிஎன்னைஉடனேபுறப்படச் செய்து விட்டது. அடிக்கடி சிறு ஸ்டேஷன்களில் வண்டி நிற்கும் பொழுதெல்லாம் சொல்லொணு வாதனை தந்தது. கைப்பெட்டியைத் தலையணையாகக் கொண்டு சிறிது கண்ணயர்ந்தேன்.

ஃ

'நண்பா! எப்பொழுது புறப்பட்டாய்? உன் மனைவியின் சமாசாரம் தெரியுமா? இன்று காலையில் தன் இளங்கர்ப்பம் சிதைவுற்றதின் காரணமாகத் தன் பிறந்தகம் சென்றிருக்கிறதாய்க் கேள்விப்பட்டேன். பாவம்! ஒரு மாதம் கழித்து எவ்வளவு ஆவலோடு புறப்பட்டாயோ' என்று கூறினுன் என் பக்கத்தே வந்த நண்பன். என்மனம் பட்ட பாட்டை ஈசனேயறிவார். மதுரை ஜங்ஷன் வந்து சேர வேகமாய் வீட்டிற்கு சென்றேன். மனைவியை வீட்டில் காணவில்லை. பெட்டியை மூலையில் எறிந்துவிட்டு தலை சுற்றுகிறதாய்ச் சொல்லி தாயார் கொடுத்த காபியையும் மறுத்து விட்டுக் கீழே படுத்துக் கொண்டேன்.

ஃ

என் தாயார் மறுபடியும் மறுபடியும் என்னை எழுப்ப, கோபமாய் 'போ அம்மா! எனக்கு ஒன்றும் வேண்டாம் என்று கூறினேன்.' என்ன ஐயா ஜங்ஷன் வந்து விட்டதென்று எழுப்பினுல் உளறுகிறீர்களென்று போர்ட்டர் முணு முணுப்பதைக் கேட்டு விழித்துப் பகற்கனவென வுணர்ந்து விரைந்து வீடு சென்றேன். கனவு பலித்துவிடுமோவென்று நினைக்க மனசு பட படவென்று அடித்துக் கொண்டது. ஆனுல் என்காதலி சர்வாபரணலங்கிருதையாய் அன்றலர்ந்த மலர் சூடிப் புன்னகையுடன் 'தாங்கள் அவசியம் இந்த வண்டிக்கு வந்து விடுவீர்களென்றுநம்பித் தங்களை வரவேற்கத்தயாராய் இருந்தேன்' என்று உளமகிழ்ச்சியுடன் கூறி என்னை ஆலிங்கனம் செய்துகொண்ட பொழுதுயானடைந்த காதலின்பத்தை அநுபவித்தே அறியவேண்டும்.

எம். கே. பிள்ளை.

---

மானிடாது விடுதலையே யுவர்களது வேலையாகும், யுவர்களால் ஆகாதது ஒன்று மில்லை.




# இராஜ சந்திரன்

## அல்லது—மறைந்த கைதி.

### அத்தியாயம்—2.

### தந்தையும் குமாரத்தியும்.

(224-ம் பக்கத் தொடர்ச்சி.)

II

மறுநாட் காலையில் கண்ணப்பன் தன் குமாஸ்தா தனபாலனுடன் சாரதா விலாஸத்திற்குச் சென்று சபாபதி முதலியாரைக் கண்டான். அவர் அதிக வேதனையடைந்து பல ஹீனத்துடன் காணப்பட்டார். கண்ணப்பன் அவரை வணங்கி, தான் கொண்டுபோன ஐம்பதினுயிரம் ரூபாய் நோட்டுகளையும் அவரிடம் கொடுத்துவிட்டு தனபாலனுடைய உதவியால் சகல பத்திரங்களையும் எழுதி முடித்துக்கொண்டான். முதலியார் அதிககாயலாவாயிருந்தபடியால் அவர் தன்னுடைய குமாரத்தியாகிய கமலாவை யழைத்துக் கண்ணப்பன் கொடுத்த நோட்டுகளை யெண்ணிப் பார்க்கும்படி கூறினர். அவளும் அவ்வாறே செய்தபின் கண்ணப்பன் முதலியாரிடமும் கமலாவிடமும் விடைபெற்றுப் போகும் சமயத்தில் சபாபதி முதலியார் அவனை நோக்கி, நீ இன்னும் சற்று நேரம் இரு, நான் உன்னிடம் சில சங்கதிகள் பேச விரும்புகிறேன்-என்றார். அப்போது கண்ணப்பன் தனபாலனை நோக்கி, நீ வீட்டிற்குப்போய் வேலைகளை யெல்லாம் கவனித்திரு; நான் சீக்கிரத்தில் வருகிறேன் என்றான்.

தனபாலன் போய்விட்ட பின் முதலியார் மெல்லியகுரலுடன் "கண்ணப்பா, இப்போது நடந்த விற்கிரயமும், கமலாவை நீமணக்கப்போவதும் இரகசிய மாகவே யிருக்கட்டும். ஏனெனில், என் தங்கை தன் குமாரன் பலராமனுக்குக் கமலவல்லியைக் கேட்க எண்ணி யிருக்கிறாள். அது எனக்கு இஷ்டமில்லை. அவளுடைய விரோதமும் நான் உயிருடன் இருக்கும்போது வேண்டாம். நான் இன்னும் அதிக நாள் ஜீவித்திருக்கமாட்டேன். தினே தினே நோய் அதிகரித்து வருகின்றபடியால் என் ஆயுள் நெருங்கிவிட்டதென அறிகிறேன். என்னுயுளுள்ள வரையில் நான் இவ்விடத்திலேயே யிருக்கப் பிரியப்படுகிறேன்" என்றார்.

தடையில்லாமல் உங்களிஷ்டப்படியே செய்யுங்கள் என்று கண்ணப்பன் அன்போடு கூறினன்.

அச்சமயம் கமலா சில தட்டுகளில் பலகாரமும், வெள்ளி டம்ளர்

களில் பாலும் காப்பியும் கொண்டு வந்து கண்ணப்பனெதிரே வைத்தாள். அவன் அதிகாலையில் காப்பி சாப்பிட்டு வந்தபடியால், அவனுக்கு உண்மையில் தாகமேனும் பசியேனு மில்லை; என்றாலும் கமலாவின் குளிர்ந்த அழகிய புன்சிரிப்பான முகத்தைக் கண்டதும் மதிமயங்கினவனாகி யாதொன்றும் கூறாமல் மெதுவாகத் தின்ன முயன்றான். சபாபதி முதலியார் கொஞ்சம் உட்கொண்டபின் கமலாவை நோக்கி "நீ பிடில் வாசிப்பதைக் கேட்க விரும்புகிறேனாதலால், உடனே ஓர் தேவாரம் வாசி" யென்றார். கமலா சங்கீதத்தில் அதிக பிரிய முடையவளானபடியால் வேகமாகச் சென்று பிடிலை யெடுத்துக்கொண்டு வந்து கந்தர்வக் குரலில் கம்பீரமான ஸங்கீதம் பாடினாள். மிகவும் இனிமையாக இருக்கிறதென்று கண்ணப்பன் அவளை மெச்சினான்.

என்னிடம் வேறோர் விலையுயர்ந்த பிடில் இருக்கிறது. அதை வாசிக்கும் போது கேட்போருடைய காதிற்கு வெகு இனிமையாக விருக்கும். அது கொஞ்சம் உடைந்திருக்கிறபடியால் இதை எடுத்து வாசித்தேன் என்று கமலா கூறினாள்.

இதைக் கேட்டதும் சபாபதி முதலியார் ஆச்சர்ய மடைந்தவர் போல் தலையை நிமிர்ந்து கமலாவை நோக்கி, அந்தப் பிடில் எப்போது உடைந்து விட்டது? என்னிடம் முன்னதாகச் சொல்லி யிருந்தால் நான் அதை சங்கீத வித்வான் செல்லப்பனை யழைத்து வந்து ரிப்பேர் செய்திருப்பேனே என்று கூறி, ஓர் வேலைக்காரனை யனுப்பி செல்லப்பனை யழைத்துவரச் சொன்னார்.

செல்லப்பன் பௌரிங்குப் பேட்டையில் ஓர் ஆபீசில் மாதம் முப்பது ரூபாய் வருமான முள்ள ஓர் உத்தியோகத்திலமர்ந்திருந்தான். அவனுக்கு வயது சுமார் நாற்பதிருக்கும். மிகவும் நற்குண முடையவன். சங்கீதம் வாசிப்பதிலும், சங்கீதப்பெட்டிகளை ரிப்பேர் செய்வதிலும் கைதேர்ந்தவன். அவனுக்கு அவ்வூரிலுள்ள சில பிரபுக்களின் வீட்டுப் பெண்களுக்கு சங்கீதம் கற்றுக்கொடுப்பதில் மாதம் இருபது ரூபாய் வரும்படி வந்தது. இவனுக்கு ஓர் அழகிய மனைவியும், முக்கால் டஜன் குழந்தைகளுமிருந்தார்கள். இவன் சிலரைப்போல் அதிக சிக்கனமாகச் செலவு செய்து பணம் சேர்த்துவைக்கும் திறமையுடையவனல்ல. இவனுடைய மனைவி இவனைவிட விபரீதமாகச்செலவு செய்பவளாதலால் இவனுடைய வரும்படி இவனுடைய குடித்தனத்தை ஒழுங்காக நடத்தப் போதாமலிருந்தது. இவன் அவ்வூரில் ஓர் சங்கீத கலாசாலை வைத்தான். அதில் லாபம் இல்லாமற்போய் விட்டது மன்றி வாத்தியப் பெட்டிகளை வாங்கியதால் கையிலிருந்தபணமுமழிந்துவிட்டது. இவன் சில சமயங்களில் அவ்வூரிலுள்ள பிரபுக்களை வேண்டிக்கொண்டு ஓர் இனிய சங்கீதக் கச்சேரி வைத்து, வெளியூர்களில் கைதேர்ந்த சங்கீதப் பயிற்சியுள்ள ஸ்திரீ புருடரையெல்லாம் வரவழைத்து நடத்திக் காண்பித்துப் பணம் வசூலிப்பான். அவ்விதத்திலும் அவனுக்குப் போதுமான வரும்படி கிடைப்பதில்லையாகையால், கடவுள் எவ்வளவு வரும்படி வந்தாலும் ஒரு சிறு சொத்தாவது சேரும்படி மிச்சப் படுத்தி மேல் உயர்வதற்கு இடமில்லாமல் கைக்கு வந்ததை யெல்லாம் அடியோடு செலவிடவே வைத்துக் கேவலத்திலேயே கிடந்து அழதும்படி நம்மைக் கட்டுபடுத்தி விட்டாரென நினைத்துச் சகிப்புடனே தன்

காலத்தைக் கழித்துவந்தான். அவனுடைய தந்தை அவனுக்கு இறக்குந் தருவாயில் சிறிது பணம் வைத்தார். அவன் சங்கீதம் கற்றுக்கொள்ள அதிக பிரியங்கொண்டவனாகி அவ்வழியிலேயே அப்பணத்தையெல்லாம் செலவழித்துவிட்டான்.

செல்லப்பன் வந்து நிற்பதை சபாபதிமுதலியார் கண்டதும்கமலாவிடம் கூறி, பிடிலைக் கொண்டுவந்து அவனிடம் கொடுக்கச் செய்தார். அவன் அவ்விடத்திலேயே உட்கார்ந்துசுமார் ஒரு மணி நேரத்திற்கெல்லாம் சரிப்படுத்திவிட்டான். கண்ணப்பன் அவனுடைய சாமர்த்தியத்தை வெகுவாக மெச்சினான். கமலா அந்த வீணையை மீட்டிப் பல பாடல்கள் பாடினாள்.

இது முடிந்ததும் சபாபதி முதலியார் கூறியபடி கமலா பீரோவைத் திறந்து ஓர் பத்து ரூபாய் நோட்டைக் கொண்டு வந்து செல்லப்பனிடம் கொடுத்தாள். அவன் அதையதிகதிருப்தியுடன் வாங்கிக்கொண்டு, முதலியாரையும் அருகே உட்கார்ந்திருந்த கண்ணப்பனையும் வணங்கி தன் ஜோபியினின்றும் இரண்டு பிரசுரத் துண்டுகளை (Notices) யெடுத்துக் கொடுத்தான். சபாபதி முதலியார் தாம் வாசிக்க இயலாமையால் அந்தக் கமலாவிடம் கொடுத்து வாசிக்கும்படி கூறினார். அவளும் அடியில் வருமாறு உரக்க வாசித்தாள்.

ஓம் கணேசாய நம:

முருகன் துணை.

மனோரம்மியம்! இனிய சங்கீதம்!!

வரத்தவறாதீர்கள்! தக்க சமயம்!!

நாளது ஜூலை மாதம் 27-ந்தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை 6—மணி முதல் 8-30—மணி வரையில் பௌரிங்குபேட்டை ஸ்ரீமான் ராஜு முதலியார் பங்களாவில் பிரக்யாதி பெற்று, அநேக தங்கமெடல்களடைந்த சங்கீத வித்வான் செல்லப்பன் அவர்களால் இனிய சங்கீதக்கச்சேரி அதிக அருமையாக நடத்தப்படும். அச்சமயம் யாழ் வாசிப்பதில் கைதேர்ந்த தஞ்சை யமுனாபாயும், குயிலைப்போன்ற இனிய சாரீரத்தினையுடையகும்பகோணம்ராஜேஸ்வரியும், நாட்டியத்தில் வல்ல நாகப்பட்டிணம் நீலாதாட்சியும் தங்கள் சாமர்த்தியங்களைக் காட்டி நடிப்பார்களாதலால் கனதனவான்கள் தவராது விஜயஞ் செய்து ஆனந்தமடைவீர்களாக.

டிக்கட் விவரம்.

| | புருஷர்களுக்கு | | ஸ்திரீகளுக்கு | |
|---|---|---|---|---|
| | ரூ. | அ. | ரூ. | அ. |
| 1-வகுப்பு சோபா | 15 | 0 | 12 | 0 |
| 2-வகுப்பு ,, | 10 | 0 | 9 | 0 |
| 1-வகுப்பு நாற்காலி | 7 | 8 | 7 | 0 |
| 2-வகுப்பு ,, | 6 | 0 | 5 | 0 |
| பென்ச்சி | 4 | 0 | 3 | 0 |
| ஜமக்காளம் | 3 | 0 | 2 | 8 |
| தரை | 2 | 0 | 1 | 4 |

ஸ்திரீகளுக்குப் பிரத்தியேகமான இடம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

செல்லப்பன்.

மானேஜர்.

இதை வாசித்து முடித்ததும், செல்லப்பன் சபாபதி முதலியாரை நோக்கி, "ஐயனே! தாங்கள் எப்படியாவது அன்று விஜயம் செய்யவேண்டும், இச்சமயம் நான் ஏராளமாகப் பணம் செலவழித்து வெளியூரிலுள்ள சங்கீத சிரோன்மணிகளை யெல்லாம் வரவழைத் திருக்கிறேன். உங்களைப்

போன்ற சீமான்கள் விஜயஞ் செய்தால் எனக்குப் பணம் வசூலாவது மன்றி உங்களுடைய நேயர்களும் அங்கு விஜயஞ் செய்வார்கள். இதற்கு முன் நான் எத்தனையோ தரம் கச்சேரி வைத்து நஷ்டமடைந் திருக்கிறேன். இச்சமயம் நீங்கள் வருவீர்களாகில் எங்களுக்கு நல்ல லாபம் கிடைக்கும். ஏழையாகியயானும் ஏதோபிழைத்துப் போவேன்'' என்றான்.

சபாபதி :-ஐயோ, என்னால் நடக்க முடியவில்லையே; நான் எப்படி வர முடியும்?

செல்லப்பன் :—எப்படி யாவது அன்று விஜயம் செய்யவேண்டும்.

கமலா :—ஆம், ஆம், செல்லப்பன் மிகவும் ஏழை. இச்சமயம் நீங்கள் போனால்தான் அவருக்கு நல்ல லாபம் கிடைக்கு மாகையால், நீங்கள் செல்வதில் உங்களுக்கு நல்ல புண்ணிய முண்டு.

என்று கூறிவிட்டு கண்ணப்பனை நோக்கி, சங்கீதக்கச்சேரி ஞாயிற்றுக்கிழமை யேற்படுத்தி யிருப்பதால் நீங்களும் வரலாம்; வரும்போது சுகுணவதியையும் அழைத்துக் கொண்டு வாருங்கள் என்றாள். வேறு யாராவது அவனிடம் இவ்வார்த்தையைக்கூறியிருந்தால் அவன்வரமுடியாதென்று மறுத்துக் கூறிவிட்டிருப்பான். ஏனெனில், இவன் இவ்வழியில் பணத்தைச் செலவழிப்பதை சுகுணவதி யறிந்தால் இவனை யேசுவாள். என் செய்வான் பாபம்! கமலாவின் வார்த்தையை மறுக்க மனமில்லாமல் அவ்வாறே செய்வதாகத் தலையை யசைத்தான். மனம் இல்லாதவர்களையும் இணங்க வைத்துவிடுவது சிபாரிசு செய்பவர்களின் உயர்வைப் பொறுத்திருக்கிறது. எவ்வளவு கற்றிருந்தாலும் சிபாரிசு இல்லாதவர்கட்கு இந்த நாளில் உத்தியோகம் கிடைக்கவில்லையல்லவோ?

அப்போது செல்லப்பன் தன்னுடைய ஜேபியிலிருந்து பத்து முதல் வகுப்பு சோபா டிக்கட்டுகளை யெடுத்து கமலாவிடம் கொடுத்து இதில் உன்னால் கூடிய வரையில் விற்று எனக்குப் பணம் கொடு என்று கூறி யாவரையும் வணங்கிச் சென்றான்.

அவன் போய்விட்டபின் கமலா தனக்கும் தந்தைக்கும் இரண்டு டிக்கட்டுகளை யெடுத்துக்கொண்டு மீதி டிக்கட்டுகளைக் கண்ணப்பனிடம் தந்து இதை உங்கள் சிநேகிதர்களுக்குக் கொடுத்து பணம் வசூல் செய்யுங்கள் என்றாள். கண்ணப்பன் தடுத்துப்பேச முடியாமல் அவற்றைத் தன் ஜேபியில் போட்டுக்கொண்டு வீடு சென்றான். வழியில் அவன் கண்ட சிநேகிதர்களை யெல்லாம் அழைத்து, இந்தக் கச்சேரி மிகவும் நன்றாயிருக்கு மென்றும், கமலாவும் சபாபதி முதலியாரும் விஜயம் செய்யப் போகிறார்க ளென்றும் கூறி அதிக சிரத்தையுடன் ஆறு டிக்கட்டுகளை விற்று விட்டான். இவ்வளவு கஷ்டம் இவன் எடுத்துக்கொண்டது செல்லப்பனைத் திருப்தி செய்வதற்கல்ல. அழகிய முகத்தினையுடைய கமலாவைத் திருப்தி செய்வதற்கே தான். தான் இனி விவாகம் செய்துகொள்ள இருக்கும் பெண்மணி இடும் கட்டளைகளை மறுக்கக்கூடிய ஆடவர் உலகில் உண்டா?

---

ஒரே வக்கீல் ஒரு கக்ஷிக்காரனுக்குத் துணையாகவும், அவன் விரோதிக்கு ரகசிய நண்பனாகவும் இருந்தால் அதை விடப் படுகுழி வேறு வேண்டாம்.

கண்ணப்பன் தன் வீடு சேர்ந்ததும் சுகுணவதியைக் கண்டு அவளிடம் தன் வசமிருந்த இரண்டு டிக்கட்டுகளைக் கொடுத்து, இந்த சங்கீதக் கச்சேரிக்கு உன்னையு மழைத்துக் கொண்டு போவதற்காக இரண்டு டிக்கட் வாங்கி வந்திருக்கிறேன் என்ருன். அவள் அந்த டிக்கட்டுகளைப் பார்த்ததும் கோபமடைந்தவளாகி சே! சே! என்ன முட்டாள் வேலை செய்தாய்; எதுங்கெட்ட இரண்டு காகிதத்துண்டுகளை முப்பது ரூபாய்க்குப் பெற்றுக்கொண்டு வந்தாயே; இப்போது அந்தக் கச்சேரியைப் பார்க்காவிடில் என்ன முழுகிப் போகிறது? பணத்தினருமை உனக்கெப்போதுதான் தெரியுமோ என்று உரத்த குரலுடன் ஆர்ப்பாட்டம் செய்து டிக்கட்டுகளைக் கீழே வீசியெறிந்து விட்டாள்.

கண்ணப்பன் அவற்றைப் பொறுக்கி யெடுத்துக்கொண்டு "நானென்ன செய்யட்டும். எனக்கும் சங்கீதத்திற்குப் போகப் பிரியமேயில்லை. சந்தர்ப்பம் அப்படிநேர்ந்தது. நான் மறுத்துக்கூற மனமில்லாமல் மௌனமாக ஒப்புக்கொண்டு வந்து விட்டேன்" என்ருன்.

"அதென்ன சந்தர்ப்பமோ, கடவுளுக்குத்தான் தெரியும். லாயர்களுக்குப் பணம்சம்பாதிக்கவும் தெரியாது. கட்சிக்காரன் வந்தால் அவனை ஓட்டாண்டியாக்குவதற்குப்பார்ப்பார்களேயொழிய..." என்று சொல்லிக்கொண்டிருக்கையில், "அந்த இழவு இப்போது என்னத்திற்கு, நீ வரப் போகிருயா இல்லையா சொல்" என்று கண்ணப்பன் கேட்டான். "நான் வரமாட்டேன். அறுத்துக் கெட்ட முண்டத்திற்கு சங்கீதம் ஒருகேடா, யாராவது கேட்டாலும் சிரிப்பார்கள்" என்ருள்.

கண்ணப்பன் யாதொன்றும் பேசாமல் டிக்கட்டுகளை ஜேபியில் போட்டுக்கொண்டு கோர்ட்டுக்குப் போய்விட்டான். அன்றையதினம் சனிக்கிழமை யாதலால் நாளையதினம் சங்கீதக் கச்சேரி. ஃ

அன்று மாலையில் கண்ணப்பன் கச்சேரியிலிருந்து வந்ததும் நேராகக் கமலா வீட்டிற்குச் சென்ருன். அப்போது சபாபதி முதலியார் அதிக தொந்திரவுபட்டுக் கதறிக்கொண்டிருந்தார். அவருடைய இடது கால் வீங்கி யிருந்தது. முகமும் மாறியிருந்தது. அவர் முன்புபோல் படுக்கையில் புரள முடியாமல் பிணம்போல் மல்லாந்தபடியே படுத்துக் கிடந்தார். கண்கள்மேல் நோக்கி யிருந்தன. கமலா துக்ககரமான முகத்துடன் அவனருகே உட்கார்ந்திருந்தாள். என்னே பாபம்! அவர் இறந்துவிட்டால் அவள் திக்கற்றவளாய்விடுவளன்ருே? கண்ணப்பனைக் கண்டதும் சபாபதி முதலியார் அதிக மெல்லிய குரலுடன் "அப்பா, என்கதி இப்படியாய் விட்டது. நான் உன்னை வெகுவாக நம்பியிருக்கிறேன். நீ என்னைக் கைவிட்டு விடாதே. உன்னைவிட யாரையும் நான் நம்பவில்லை, நான் இனி பிழைக்கமாட்டேன். என் ஆயுள் நிமிடக் கணக்கிலிருக்கிறது" என்று அழுதார். கமலாவும் கண்ணீர் விட்டலறினுள். கண்ணப்பன் அவரைத் தேற்றித் தன் கைக்குட்டையை யெடுத்து அவருடைய கண்களையும் கமலாவின் கண்களையும் துடைத்து சமாதானப் படுத்தினன்.

---

மெய் ஒருவனை உயர்த்துகிறது. அவன் குணங்களை இன்னும் மேன்மையாக்குகிறது. பொய்யோ அவனைத் தாழ்த்தித் துரோக காரியங்களில் நுழையச் செய்வித்துத் தீயோனுக்குகின்றது. பட்டறிந்தவர்களுக்கே இது விளங்கும்.

அன்றிரவு முற்றிலும் சபாபதி முதலியார் மிக்க கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். வியாதியஸ்தர்களுக்கே இராப்பொழுது ஒரு கனத்தசோதனையான நேரம். மறநாட் பொழுது விடிந்ததும் முதலியாருக்கு குணம் ஏற்பட்டு பேசவும் எழுந்து நடக்கவும் கூடியவரானர். இரவு முழுதும் கண்ணப்பனும் கமலவல்லியும் அவர் அருகிலேயே கண்விழித் திருந்தனர். முதலியார் கண்ணப்பனைப் பார்த்து இனி என்னைப்பற்றிக் கவலைப்பட வேண்டா மென்றும், கபம் கழுத்தை விட்டு இறங்கிவிட்ட தென்றும், வீட்டுக்குப்போய் மாலையில் வரும்படியும், அன்றிரவு சங்கீதக் கச்சேரிக்குச் சென்று செல்லப்பனைக் கௌரவிக்கும்படியும், சுகுணவதியை அனுப்பினுல் கமலவல்லியையும் அவளுடன் அனுப்புவதாகவும் சொன்னுர். கமலவல்லி தனக்கு எந்த சங்கீதமும் வேண்டா மென்றும், தந்தையை விட்டு அரை நிமிஷமும் பிரிய முடியா தென்றும் அழுகையோடும் தெரிவித்தாள். சபாபதி முதலியார், "என் கண்ணே! நேற்றிரவு நீ அதிகம் பயந்து விட்டாய். இந்தக் கண்ணப்பன் என்னைப்பற்றி அதிக கவலைப்பட்டுப்போய் உன்னிடம் ஏதாவது உளறியிருக்கலாம். அவற்றை யெல்லாம் நம்பாதே. நானே சொல்லுகிறேன் கேள். நான் இப்போது பூரணசுகமே. நீ சங்கீதத்தினுல் சற்று உல்லாசமடைந்தால் எனக்காக ஏங்கிக்கிடந்த நெஞ்சம் ஒருவாறு பலப்பட்டுத் தேரும். ஆதலின், சுகுணவதியுடன் அவசியம் போய்வா அம்மா. நான் தான் வர முடியவில்லை. நீயும் ஏமாற்றி விட்டால் பாவம் அந்த ஏழை செல்லப்பன் பணக்காரர்களான நாம் தன்னை மதிக்கவில்லை யென்று நினைத்து வருந்துவான். அது தர்மமல்ல. ஒரு யோக்கியமான உழைப்புக்கார ஸம்சாரியைக் கடவுள் ஏழ்மை யுடனேயே வாழவைப்பது அவரது லீலா விநோதங்களில் ஒன்று. நாம் கடவுளுக்கும் மேலான ஸ்தானத்தில் நின்று அந்த ஏழையை ஆதரித்துப் பகவானை நாணும்படி செய்து விடுவோம். ஆதலின், என் வார்த்தைக்கு மறுக்காதே அம்மா" என்ருர்.

தன் தந்தை அதிகமாகப் பேசுவது அவரது தேகத்துக்குக் கெடுதியை உண்டுபண்ணு மென்று அஞ்சியவளாய் மறுத்துப் பேசாமல் "அப்படியே ஆகட்டும் அப்பா" என்ருள்.

கண்ணப்பனுடனும் கமலவல்லியுடனும் முதலியார் சிற்றுண்டி உட்கொள்ள ஆசையிருந்தாலும் மிக்க பலஹீனத்தால் எதையும் புசியாமல் காபியையும் மட்டும் பருகினுர். அதன் பின் கண்ணப்பன் மாலையில் கண்டிப்பாக வருவேன் என்று பேசிவிட்டு, முதலியாருடைய வார்த்தையை மறுக்க முடியாமல் அவரை விட்டுப் பிரிந்து அரை மனதுடனும் புறப்பட்டுச் சென்ருன். செல்லும் பொழுது பயங்கரமான இரவு எப்படியோ தொலைந்து விட்ட தென்று சந்தோஷத்துடன் சொல்லிக்கொண்டான்.

அன்று மாலையில் கண்ணப்பன் தன் தமக்கை சுகுணவதியுடன் வந்து விட்டான். முதலியார், ஏது இன்று உன் வேலைக்குப் போகவில்லை

தாய், தந்தை, தமக்கை, தந்தையுடன் பிறந்த அத்தை இவர்கள் தன்னை எவ்வளவு ஹிம்ஸித்தாலும் அவர்களிடத்துள்ள பாசம் அவர்கள் தன்னை அட்சியாளுவதற்கெல்லாம் உட்பட வைக்கிறது. ஏனெனில் அன்னேர் கண்மூடினுல் அவர்களுக்குச் சமமாக இன்னொன்று பெற இயலா.

போலிருக்கிறதே யென்று கேட்க, ஆம், மனதுக்கு சந்தோஷமில்லாத தால் புத்தி எதிலும் செல்லவில்லை; வேலைக்குப் பதிலாகத் தூங்கும் வேலை யைச் செய்தேன் என்றான். முதலி யார் புன்னகை கொண்டார்.

அன்றிரவு கண்ணப்பன், சுகுண வதி, கமலவல்லி மூவரும் செல்லப்ப னின் கச்சேரி நடக்கும் பங்களாவுக் குச் சென்றனர். ஏராளமான ஜனங் கள் நிறைந்திருந்தனர். இன்றைய தினம் செல்லப்பனுக்கு நல்ல திசை தான் என்று கண்ணப்பன் ஸந்தோ ஷித்தான்.

சற்று நேரத்திற் கெல்லாம் சங்கீ தம் ஆரம்பிக்கப்பட்டது. ஸகல காட் சியும் ரம்மியமாகவே இருந்த தன்றி சங்கீதத்தின் தொனி காதுகளை யெல் லாம் கொள்ளை கொண்டுபோய் விட் டது. அநேகர் மரம்போல் அசை யாமல் நின்று மயங்கித் தங்களையே மறந்து விட்டனர். அப்பால் சுமார் ஒன்பது மணிக்கெல்லாம் கச்சேரி முடிந்தது. இதுவரையில் இன்பமும் தொடர்ந்தது. இன்பத்திற்குப் பின் வருவதென்ன ?—துன்பமல்லவோ ?

கண்ணப்பன், சுகுணவதி இவர் களுடன் கமலவல்லி வெளியில் வந்த போது, ஒரு வேலைக்காரன் இவர் களுக்காகக் காத்திருந்தான். அவன் கமலவல்லியைக் கண்டதும் "ஐயா வுக்கு உடம்பு அதிக உபாதையாயிருக் கிறது; டாக்டர் சிங்காரவேலு வந் திருக்கிறார். அவர் உங்களை உடனே அழைத்து வரும்படி தெரிவித்தார் என்றான். இதைக் கேட்டதும் எல் லோரும் பயமடைந்தார்கள். கமலா வின் முகம் வாடிவிட்டது. "ஐயோ! தந்தையே! உனக்கு ஆபத்து வந்து விட்டதா ?" என்று கதறினாள்.

வேலைக்காரன் :—அம்மா ! அழா தீர்கள். உங்களை உடனே அழைத்து வரும்படி டாக்டர் சிங்காரவேலு சொன்னார். வண்டியுடன் வந்திருக் கிறேன். உடனே புறப்படுங்கள்

என்றான். மூவரும் உடனே வண்டியேறி வீடு சேர்ந்தனர். கமலா வீடு சேர்ந்ததும் தன் தந்தையைக் கண்டழுதாள். டாக்டர் சிங்காரவேலு அவளைத் தேற்றி நீ விசனப்படுவதில் பயனில்லை, வீக்கம் மார்பில் வந்து விட்டது. இது சங்கதி உன் அத்தை யாகிய கனகாம்புஜத்திற்குத் தெரிவி என்றார். அவளும் அவ்வாறே செய் தாள். சற்று நேரத்திற் கெல்லாம் கனகாம்புஜமும், கோவிந்த முதலி யாரும் பலராமனும் வந்து சேர்ந்து துக்கக்கடலில் மூழ்கினார்கள். அன் றைய இரவெல்லாம் கழிந்தது. முதலி யாரின் வீக்கமதிகமாய் விட்டது. கண்ணப்பனும் பக்கத்திலேயே இருந் தான். அவன் டாக்டரைக் கண்டு இரகசியமாக ஆங்கிலத்தில் முதலியா ரின் விஷயம் நம்பிக்கையுண்டா என்று கேட்டான். இனிமேல் நம்பு வதில் பயனில்லை யென்று டாக்டர் கூறிவிட்டார்.

காலை சுமார் 8-மணிக்கு முதலி யாரின் முகம் வெளுத்து விட்டது. தேகம் பனிக்கட்டிபோல் ஜில்லிட்

---

அவ்வப்போது ஏதோ தாங்கள் செய்த சிறு வேலைகளுக்கு ஸன்மானமாக இடையிடையே எதையாவது ஒன்றையோ பலவற்றையோ சுருட்டிக் கொண்டு போயிருந்த போதிலுங்கூட, அதை மறந்து விட்டு, தாங்கள் எவ்வ ளவோ வேலைகள் செய்து கொடுத்ததாக எண்ணிக் கொண்டு அதற்குத் தனி யாக ஒரு சம்பளம்போட்டுத் தரும்படி கேட்கலாமா வென்றும் நினைக்கிறார்கள்.

டது. கமலா ஸ்மரணை யற்றவள்போல அவர் தலைக்கருகே உட்கார்ந்திருந் தாள். வைத்தியர் முதலியாரி னுடைய கையைப் பிடித்து நாடியைப் பார்த்தார். மார்பையும் தட்டிக் கவனித்தார். அவருடைய முகம் வாடிவிட்டது. இதைக்கண்ட கமலா அவரை நோக்கி "ஐயா, அப்பா பிழைப்பாரா, தயவுசெய்து எனக்கு உண்மையைச் சொல்லுங்கள்; நான் அவருடைய ஏக புத்திரியல்லவா, என்னை யவர் இப்பிரபஞ்சத்தில் தனி யாக விட்டுச்செல்லுதல் கடவுளுக்குச் சம்மதமா?..." என்று கதறினள். டாக்டர் அவள் கேட்ட கேள்விக்கு பதில் கூறாமல், அம்மா நீ இப்போது இவ்விடத்தி லிருக்காதே, உன்னறைக் குப்போய் இரு; பின்னால் உன்னைக் கூப்பிடுகிறோம் என்றார். கமலா தன் தந்தையை விட்டுப்போக மறுத்தாள். டாக்டர், கண்ணப்பனுக்குச் சைகை காட்டிய படியால், அவன் அவளை யழைத்துக் கொண்டு அவளுடைய அறையில் ஓர் நாறகாலியின் மீதுட் கார வைத்தான். அப்போது அவள் அவனை நோக்கி என் என்னைத் தனி யாக யிருக்கும்படி டாக்டர் சொல் கிறார். உங்கள் தந்தை யிறந்த காலத் தில் உங்களை யப்படித்தான் செய்தார் களா? என்றாள். கண்ணப்பன் அவ ளைத் தேற்றி, நீ பயப்படாதே உன் தந்தைக்கு யாதொரு ஆபத்துமில்லை யென்றான்.

ஆ! நீ பொய்சொல்கிறாய். டாக் டர் இனி என் தந்தை பிழைக்க மாட்டாரென்று உன்னிடம் ஆங்கிலத் தில் சொல்லவில்லையா என்று கேட் டாள்.

ஆம் ஆம், நீ பயப்படாதே. உன் தந்தை யிறந்து விட்டபோதிலும் உன் அத்தையாகிய கனகாம்புஜம் உன்னைக் கைவிடமாட்டாள் என் றான்.

ஐடடா எனக்கு அவ்வீட்டி லிருக்கப் பிரியமில்லை. ஏனெனில் துஷ்டனாகிய பலராமன் எனக்கு ஏதாவது கெடுதி செய்வான் என்றழு தாள்.

சே, சே, அவன் கெட்டான், அவன் உனக்கென்ன கெடுதி செய் வான்? நான் தினம் தவறாமல் உன்னை அவ்விடத்தில் வந்து காண்கிறேன் ........என்று சொல்லிக்கொண்டே யிருக்கையில் டாக்டர் வேகமாக ஓடி வந்து கண்ணப்பனை யழைத்தார். கண்ணப்பன் அவருடனே சென்று முதலியாரைக் கண்டான். தன் தந்தையின் மீதே நினைவாயிருந்த கமலவல்லியும் அந்த சமயம் அங்கு வந்து விட்டாள். ஆ! தந்தையின் அன்பு இவ்வுலகினில் எங்கு காணக் கிடைக்கும்? அந்த அன்பு நிகரில்லாத ஒரு தனி அன்பன்றோ?

சபாபதி முதலியார்:—அப்பா! என் பிரிய முள்ள கண்ணப்பா! நான் இவ்வுலகை விட்டு நீங்கவேண்டிய நேரம் வந்துவிட்டது. என் மனதி லிருக்கிற சில விஷயங்களைச் சொல்லி வாயாறக் கதறி விட்டால்தான் என் மனம் சமாதான மடையும். கமல வல்லியை நான் ஏற்கெனவே ஒரு வனிடம் ஒப்புவித்து அவள் பிரியம் போல் எவருக்காவது இஷ்டப்பட்ட வர்களுக்குக் கொடுத்துக் கொள்ளென் றும், அவள் அவனுடைய சொந்த சொத்தென்றும் சொல்லி அவன் கையில் அவளைப் பிடித்துக் கொடுத்து விட்டேன். அவனும் நானும் கமல வல்லியுமாக நிலங்களைப் பார்த்து வருவதற்காகச் சென்றபோது ஒரு புலி கமலவல்லியை நோக்கி ஓடிவந் தது. (தொடரும்.)

# ஷேக்ஸ்பியர் ஜீவிய சரிதை



ஷேக்ஸ்பியரின் ஜீவிய சரிதையை விவரமாகத் தெரிந்து கொள்வதற்கு ஏற்ற ஆதாரமில்லா விடினும் சுருக்கமாகத் தெரிந்து கொள்வதற்குப் போதிய அத்தாட்சிகள் இல்லாமற் போகவில்லை. 1564—வருடம் ஏப்ரல் மாதம் 23-ந்தேதியில் ஸ்ட்ராட் போர்ட் ஆன் ஆவனில் (Strat ford —on—Avon) வில்லியம் ஷேக்ஸ்பியர் பிறந்தார். அவருடைய பெற்றோர் ஜான் ஷேக்ஸ்பியரும், மேரி ஆர்டனும் ஆவர். ஷேக்ஸ்பியர் பிறந்த காலத்து அவருடை பெற்றோர் மிக்க ஏழ்மை ஸ்திதியிலிருந்தனர். ஆனால், அவர் பத்துப்பதினோரு வயது வரையில் பிறந்த ஊரிலேயே படித்துக் கொண்டிருந்தார். இருப்பினும் எதுவரையில் படித்தா ரென்பதை நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. அவருடைய படிப்பு மிக்க பால்யத்திலேயே முடிவடைந்ததாகக் கூறுகின்றனர். அவர் தமது பதினெட்டாம் வயதிலேயே ஆன் ஹாத்வே (Anne Hathaway) என்பவரை மணந்து இருபத்தோராம் வயதிற்குள் இரண்டு புத்திரர்களுக்கும் ஒரு புத்திரிக்கும் தந்தையானார்.

ஃ

மிக்க ஏழ்மை ஸ்திதியில் தம் பெற்றோரிருந்ததால் ஷேக்ஸ்பியர் 1586—வருடத்தில் ஊதியம் தேட லண்டனுக்குப் பிரயாணமானார். லண்டனுக்கு போய்ச் சேர்ந்ததும் பிளாக்பிரயர் நாடகக் கம்பெனியில் (Blackfrars Theatre) ஒரு நடிகனாக அமர்ந்து மூன்று வருடகால மிருந்தார். பிறகு 1589—ல் அக்கம்பனியில் ஒரு பாகஸ்த்தராகக் கூடிக் கொண்டு பெரும் லாபம் பெற்றார். நாடகக் கம்பனியில் இருக்கும் போழ்தே நாடகம் எழுதுவதில் படிப் படியாகத் திறமை யுடையவராய் 1591-ல் மிக்க பிரசித்த புருஷரானார்.

ஃ

1604-ல் அவர் நாடக மேடையை விட்டு விலகி தம் ஊர் சென்று வசிப்பதாயினார் ஆயின், வெகுநாள் இருக்கக் கூடவில்லை. 1616-ல் (தமது 52 வயதில்) ஏப்ரல் மாதம் 23-ந்தேதியில் கண்மூடினார். அவருடைய சவம் ஸ்ட்ராட் போர்ட் மாதாக் கோவிலிலேயே அடக்கம் செய்யப் பட்டாலும் 1741-ல் வெஸ்ட் மின்ஸ்டர் ஆபி (West minister Abbey)-யில் அவருடைய ஞாபகச் சின்னமாக பெரியதொரு கோபுரம் கட்டப்பட்டது.

ஃ

ஷேக்ஷ்பியர் ஓர் வரகவி. படித்துக் கிடைத்த ஞானத்தால் அவர் தம் நாடகங்களையும், காவியங்களையும் இயற்றவில்லை பிறவிக்கவித்வத்தாலே தான் மாபெரும் காவியங்களையும், விவேகத்தைத் தரும் நாடகங்களையும் அவர் எழுதினார். அவர் நாடகம் எழுதுவதிலும், நடிப்பதிலும் வருடமொன்றுக்கு 300 பவுன் சம்பாதித்தாராம். (அது இப்பொழுது 1000 பவுனுக்குச் சமமாகும்.) அவருடைய வித்வத்திறமைக்கு அரசியாகிய எலிஸபெத்தும், அரசனாகிய முதலாம் ஜேம்ஸும் அவரை ஆதரித்ததோடு புகழ்ந்தும் உள்ளார்கள்.

P. G. குலசேகரம்.






இன்று கூடிய நமது கடையில் இளிச்சவாய்ச் செட்டியார் மனம் மாறிப்போய்விடுகிற தாய் தந்தையரைப்பற்றி ஒரு பிரஸங்கம் செய்தார். "தந்தை, குமாரன், மாற்றாந்தாய் இவர்கள் ஒரு குடும்பமாக வசிப்பினும் உத்தியோக நிமித்தமாய் மாற்றப் பட்டுக் குமாரன் வெளியூருக்குக் குடி போய் விடுகிறான். அந்த சமயம் ஒரு விருந்தாளி வருகிறார். குமாரனால் உபசரிப்பதற்கு அவன் மனைவி அங்கு இல்லை. அவன் குடும்பம் வெளியூரில் இருப்பதால் விருந்தாளி தகப்பனிடம் புசித்துக் கொள்ளுகிறார். தன்னிடம் புசிப்பதுக் குமாரனிடம் புசிப்பது போலவே என்று தகப்பனார் காட்டிக் கொள்வாரானால் அது எவ்வளவோ குடும்ப கௌரவமாகும். வீட்டுக்குள் இருக்கிற நாற்றத்தையும் சச்சரவு கோணல்களையும் வந்த விருந்தாளி அறிய முடியாமலே போய்விடும். குடும்பம் எவ்வளவு ஒற்றுமையாய் அழகாய் இருக்கிறது என்று விருந்தாளி ஒரு மதிப்புடனே யெண்ணி குடும்பத்தைக் கௌரவமாக நினைத்துக்கொண்டு தகப்பனையும் குமாரனையும் உயர்வாக எண்ணிப் புறப்பட்டு விடுவார். அவ்விதமின்றித் தகப்பனார் தன் குமாரன்மீது துவேஷம் வைத்து ஊரிலிருந்து வருகிற விருந்தாளியிடம் தன் குமாரனைப்பற்றிக் கேவலமாய்ப் பேசி அவனை அந்த விருந்தாளி தாழ்வாகவும் மதிப்புக் குறைவாகவும் நினைத்துக் கொள்ளும்படி எவ்வளவுக்குத் தூற்றவேண்டுமோ அவ்வளவுக்கும் செய்து விடுகிறார். பார்த்தீர்களா நீங்கள் வந்திருந்தும் ஜாடையாகப் போய் விட்டான்; அவன் ஒவ்வொன்றும் இப்படித்தான் செய்கிறான்; எதிலும் பட்டுக்கொள்ளாமல் பசப்பி விட்டு விலகிக்கொண்டு போய் விடுகிறான்; என்னைக் கவனிக்கிறானா, ஐயோ! அந்தக்கதையை ஏன் எடுத்துச் சொல்லவேணும்; நீங்கள் என்னிடமே சாப்பிட்டுக் கொள்ளுங்கள் என்று தான் வேறு தன் குமாரன் வேறு என்று பிரித்துக் காட்டிப் பேதப்படுத்துவாரானால், பிறர் பார்வைக்குக் குடும்ப கௌரவமும் வீடும் எவ்வளவு கேவலமாய்ப் போய்விடுகிறது பாருங்கள்! விருந்தாளியும் தகப்பனார் பக்கம் சேர்ந்துகொண்டு "ஆமாம்" என்ற பல்லவிபாடி அந்தப் பக்கம் நல்ல மனிதராகி தகப்பனாரிடமே புசித்துக் கொள்கிறார். அவர் இன்னும் அதிகமாகத் தன் குமாரனைக் கேவலப் படுத்தும்படி நல்ல பலத்த விருந்துகள் செய்கிறார். விருந்தாளியும் தந்தையிடம் உண்டதைக் குமாரனிடம் உண்டதாக எண்ணாமல், இருவரையும் வேறு வேறு பிரித்துத் தான் தகப்பனாரிடமே உண்டதாகவும், குமாரன் தன்னைக் கவனிக்க

---

பிறர் தன்னை அடக்கியாள்தலுக்கு ஒருவன் கட்டுப்பட்டு உட்படுவதெல்லாம் ஒவ்வொரு காரியார்த்தமாகத் தான். அவ்வளவே யன்றிப் பயந்து நடுநடுங்கி யல்ல, உட்படுவது வஞ்சனையாகவே ஒரு சங்கதிக்காக இருக்கலாம். மனஸ்பூர்வமாக உட்பட்டு நடத்தல் அன்பு ஒன்றில் தான்.

வில்லை யென்றும் பேதம்பேசிக் குமாரன்மீது வருத்தமாகவே புறப்பட்டு விடுகிறார். இந்தப் பேதத்தைத் தகப்பனார் விருந்தாளியின் மனதில் உற்பத்தி செய்வதினால் என்ன லாபத்தை யடைகிறாரோ? தன் குமாரன் தூற்றப்படுவதே அவருக்குலாபம் போலும்! இதனால் வந்த விருந்தாளியின் முன்பு குடும்ப கௌரவம் குலைந்து கேவலப் படுவதைத் தந்தை உணருகிறதேயில்லை. இவ்விதம் ஒரு வீட்டில் இரண்டு பிளவுகள் நேருவது அந்த வீட்டுக்கு வருகிற மூன்றாவது மனிதனாகிய விருந்தாளிக்கு அதிக சௌகரியமாய் விடுகிறது. நல்ல புசிப்பும் நெய் தயிர் பாலோடும் பக்குவமாய்க் கிடைக்கிறது. விருந்தாளியும் தகப்பனார் மனம் ஸந்தோஷப்படும்படி தாளம் கொட்டுகிறார். நெடுங்காலம் இந்த விருந்தாளியை தன் கைச் செலவில் உபசரித்து வந்திருக்கிற குமாரன் இப்போது தூற்றப்படுகிறான். இதுஎன்ன குடும்ப அநியாயங்கள்! குடும்ப மதிப்பே பாழ்பட்டு விடுகிறது. ஒற்றுமை யில்லாமற் பிரிந்தும், மனம் வேறு பட்டும் போன குடும்பங்களில் இந்த மாதிரியான அனுபவங்களை எவ்வளவோ பார்க்கலாம்" என்றார்.

ஃ

புண்பட்ட புண்ணிய கோடி முதலியார் தமது வீட்டுச் சச்சரவைப் பற்றிப் பேசினார். "ஒருதினம் என் தாயாருக்கு மூன்று சீதாப்பழம்வாங்கி வந்தேன். அதை என் மனைவி கேட்க, என் தாயார் அதில் பெரியதாக இருக்கும் ஒன்றை எடுத்துக் கொடுத்தார். என் மனைவி "இது காயாக இருக்கே" யென்று வீசி எறிந்தாள். உடனே நான் "உனக்கு என் கோபம்? காயோ எப்படியோ, அதை நான் தாயாருக்கல்லவா வாங்கினது, உனக்குப் பிரியமில்லா விட்டால் சாதாரணமாய்க் கொடுத்து விடுகிறதுதானே, வீசிஎன் எறிந்தாய் என்று கண்டித்தேன். அதற்கு என்மனைவி, "எனக்கு என்ன ருல்தான் காசு இருக்கிறது" என்றாள். நான் உனக்கு ஏதும் வாங்கித் தந்ததில்லையா வென்று கேட்க, "என்ன வாங்கித் தந்தது ஒன்றுமேயில்லை" என்று அவள் சொல்ல, "கூடக் கூடப் பேசாதே, என் தலைவிதி, எத்தனையோ பேர் இருக்க உன்னைக்கொண்டு வந்து வைத்தார்கள்" என்று நான் சொல்ல, அதற்கு அவள் "நீ இல்லாவிட்டால் இன்னொரு புருஷன் வருகிறான், எனக்கென்ன கலியாணமே ஆகாமல் போய்விடுமா, எனக்கும்எவ்வளவுபேர் காத்துத்தான் கிடந்தார்கள்" என்றாள். நான் கோபத்துடன், "இப்பொழுதே தொலைந்துபோ" என, அதற்கு அவள் "போகாமல் இங்கேதான் இருக்கப் போகிறேனோ" என்றாள். இதன்மேல் நான் துரத்தி விடுவதென்று துணிந்து அவள் டிரங்கு பெட்டியை வெளியே எடுத்துவைத்துக் கழுத்தைப் பிடித்துத் தள்ளினேன். பிறகு பக்கத்து வீட்டார் வந்து சமாதானம் செய்தனர்" என்றார்.

ஃ

என் பெண்ணரசி சங்கதி கேளுங்கள் என்று பெத்த பெருமாள் எழுந்தார். "நான் வேலைக்குச் சென்று விட்டு மத்தியானம் வீட்டிற்கு வந்தபோது என்மனைவி படுத்துக் கொண்டிருந்தாள். அவளை எழுப்பி சமையல் செய்தாயா என்றேன். பழயது

---

ஒரு காசுடன் ஒரு காசு சேர்ப்பது கஷ்டம், ஒரு காசுடன் மூன்று காசையும் கூடச் செலவிடுவது சுலபம், எவ்வளவு செலவிலும் சிக்கனம் காண்பித்தால் தான் சுகப்படலாம்.

அதிகம் இருந்ததால் சமைக்கவில்லை யென்றான். சரி, பழயதாவது போடு என, அதற்கு அவள் மௌனமாயிருக்க, பசி பொறுக்காமல் உள்ளே போய் பானைகளைத் திறந்து பார்த்து ஏதுங்காணாமல் ஏமாறி எரிச்சலுடன் மனைவியிடம் வர, அவள் தூங்குவது போல் பாவனைகாட்டிப் படுத்துக் கொண்டிருந்தாள். பிறகு இவளோடு சண்டை வேண்டாமென்று மௌனமாய் ஹோட்டலுக்குச் சென்று விட்டேன்" என்றார்.

ஃ

ஐயா! என் சங்கதியையும் கேளுங்கள் என்று தொடங்கினார் மளிகை மணவாள நாராயண பிள்ளை. "என் தாய்க்கோ கனத்த குளிர்காய்ச்சல். என் மனைவியோ எட்டியே பார்க்கவில்லையாம். நான் வந்ததும் இதைத் தாய் சொல்ல, நான் என்மனைவியைக் கண்டிக்க, அவள் முகத்தைத் திருப்பிக்கொண்டு, "நான் இனி இங்கு இருக்க முடியாது, உன்னுடன் வாழ்ந்தது போதும், என் தாய் வீட்டுக்குப் போகிறேன், இதென்ன பெரிய பிடுங்கல்" என்றாள். சரி, இவளோடு சண்டை ஏனென்று என் தாயாரின் பக்கம்போய் குளிர் ஜுரத்தை யடக்கக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருந்தேன். இச்சமயம் என் மனைவியின் தந்தை வந்து "எங்கள் வீட்டில் விருந்து, பெண்ணை யனுப்பவேண்டும் என்றார். நான் முடியாது என, அதற்கு அவர் "உன்னைத் தூணில் கட்டிவைத்து விட்டு என் பெண்ணை யழைத்துப் போவேன்" என்று சொல்லி அட்டகாசம் செய்து விட்டுச் சென்றார். மறுதினம் என் தாயாருக்கு ஜ்வரமில்லை. என் மனைவி சமைக்காமல் தெருத்திண்ணையில் எதிர் வீட்டுப் பெண்களுடன் பேசியபடி இருக்க, என் தாயார் அதைப் பார்த்து "இதென்ன தாசியைப் போல் தெருத்திண்ணையே கதியாகக் கிடக்கிறாயே என, அதற்கு அவள் "நீமட்டும்பத்தினிப்பெண்ணோ" என்றாள். நான் அதைக் கேட்டுச் சகியாமல் அடிக்க, அவள் நாலுவீதி கேட்கும்படி ஒப்பாரியிட்டுக் கொண்டு, நீ அடிக்கிற வரையில் அடி, உன்னால் ஆனதைச் செய், உன்மேல் பழிபோடுகிறேன் இரு இரு இரு என்று சொல்லி திடு திடு என்று எழுந்து வீட்டுக் கிணற்றின் கைப்பிடிச் சுவரின்மேல் போய் உட்கார்ந்து கொண்டாள். பிறகு என் தாயார் அவளை இழுத்து வந்து எவ்வளவோ செலவுடன் கல்யாணம் செய்தேனே, இப்படி வாய்த்தது என் தலையெழுத்தா என்றார். என்மனைவி சமைக்க வராமல் மூலையில் பாயைப்போட்டுப் படுத்துக்கொண்டாள். இன்னும் எவ்வளவோ புராணங்கள் சொல்லுவேன். ஆ! விவாக காலத்தில் பெண்ணின் குணத்தை நன்றாக விசாரியாமல் அவசரப்பட்டுச் செய்ததின் பலன் இது. பேய் கொண்டாலும் கொள்ளலாம் பெண் கொள்ளலாகாதே என்றார். எல்லா பெண்களும் இப்படி யென்று சொல்லலாமா என்று தாண்டவக்கோன் எழுந்தார். நேரமாய்விட்டதென்று சொல்லி அவரைப் பேசாதபடி உட்காரவைத்துக் "கடை" யையும் மூடிப் பூர்த்தி செய்தோம்.

'பஹதூர்' பொன்வண்டு செட்டியார்.

---

ஒருவரைப்பற்றித் தாழ்வாய் மூன்றாவது மனுஷ்யர்களிடம் பேசுகிறார்கள். அந்த மூன்றாவது மனுஷ்யன் தான் அங்கு கேட்டறிந்தவைகளைப் பழிக்கப்பட்டவனுக்குத் தெரிவிக்க அவன் மனம் புண்ணாகிறது. இதைவிட நேரிலேயே தாழ்த்திக் குறை கூறுவதுமேல்.

# காலமே பணமாம்



காலமே பணமாம். (Time is money) மனுஷ்யன் தன் காலத்தைப் பொருள் என்று நிச்சயிக்கும் அறிவையடைந்தால் வீணாய்த் திரிய மாட்டான். வம்புகள் பேசமாட்டான். நான்கு பேர்கள் சீட்டாடினால் ஒவ்வொருவருக்கும் பின்னால் ஹநுமானின் வாலைப்போல் வளைந்து நின்று ஆட்டத்தின் வேடிக்கையைப் பார்க்கும் அசடுகள் இருவருக்குக் குறையார். அவகாசமான வேளையில் பகவானைப் போற்றினாலும் பரமஸாத கமாயிருக்குமே. நல்ல புஸ்தகங்களைப் படித்தால் மனதுக்கு இன்பமாய் இருக்கும். நல்லோர்களுடன் வசனித்தால் நன்மை பெருகும். ஸன்மார்க்கம் இன்னதென்று அறிந்தவன் வீண் காலம் போக்குவது விவேகமல்ல. சிலர் வேஷ்டி துவைப்பதிலேயே பொழுதைப் போக்குகின்றனர். இவர்களின் ஜென்மம் துணிதோய்க்கவேண்டியா ஏற்பட்டது? அற்ப தொழில்களைச் செய்து காலம் தள்ளினால் மேன்மையடைய முடியாது. உயர்ந்த நோக்கங் கொண்டு ஆரம்பத்தில் கிடைத்த அல்பமானதைச் செய்தல் தவறாகாது. நல்ல புஸ்தகங்களைப் படித்து அறிவை விசாலப்படுத்திக் கொள்ளவேண்டும். எங்குசென்றாலும் கையில் ஒரு புஸ்தகம் இருக்க வேண்டும். விவேகிகளோடு ஸம்பாஷித்து மனதை உத்ஸாக நிலையில் வைத்துக் கொள்ளவேண்டும். புத்தியில் தாழ்ந்தவர்களுடன் விருதா வார்த்தைகளைப் பேசிக் காலம் கழித்தல் தீது. படிக்கும்போதும் எழுதும்போதும் ஏகாக்ரமாயும் சுறுசுறுப்பாயு மிருப்பது நன்று. அதிகமான போஜனத்தால் வயிற்றை நிரப்பிக் கொண்டால் மனதால் வேலை செய்ய முடியாது. புத்தி சொன்னபடி கேட்காது. ஆதலின் மிதபோஜனமே மேன்மை. மகா சிலாக்கியமான காலை வேளையை வீணில் கழிப்பவன் ஒரு போதும் விருத்தியடைய மாட்டான். சரீரசுகத்துக்காக வேண்டிக் கொஞ்சகாலம் நித்திரை செய்யலாமேயன்றி பெருந் தூக்கம் தூங்குவது பிசகு. அவனுக்கும் ஸவத்திற்கும் பேதமிராது. எவன் காலத்தையே திரவியமாக நினைத்து அதை வீணாக்காமல் நல் விஷயத்தில் செலவழிக்கிறானோ அவன் ஸத் கீர்த்தியை யடைவான். அப்படிப் பட்டவனுடைய முகத்தில் தேஜஸ் ஜ்வலிக்கும். அவனைத்தான் கர்மயோகி என்போம். காலமானது அதிஸாமர்த்திய முடையது. ஸதா ஓடிக் கொண்டே யிருக்கிறது. நம்முடைய ஆயுள் நாள் ஒவ்வொரு நிமிஷமாய்க் குறைகிறதே யென்று ஒரு முறை யோசித்துப் பார்த்தோமானால் நமக்கு வீண் விஷயங்களில் புத்தி போகுமா? அல்ப ஸுகங்களில் ஆசை பிரவேசிக்குமா? ஆராய்ந்து பாராத தன்மையாலன்றோ காலத்தை வியர்த்தமாக்குகிறோம். மில்டன் என்னும் ஆங்கில மகா கவி தமது கண்களை இழந்த பிறகும் அர்த்தராத்திரியிலே கவிகளைச் செய்து தனது புத்திரியைக் கொண்டு அவற்றை எழுதச் சொன்னார். இங்கிலாந்து தேசத்துப் பிரதான மந்திரியாயிருந்த மிஸ்டர் க்ளாட்ஸன் ஒவ்வொரு நிமிஷத்தையும் ஒவ்வொரு ரத்நமாகமதித்திருந்தார். எனவே, காலமே பணம் என்று அறிந்து அதைச் செலவிடுவதில் ஜாக்கிரதையாய் இருக்கக் கடவோம்.

விவேகம்
விநோதம்
விசித்ரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரிய
ஆநந்தம்

# ஆடியடா அண்ணேன் ஆடி! ஆடி!!



ஆடி மாதத்திய மாமி வீட்டின் மரியாதை அழைப்பை எதிர்நோக்கி நிற்கும் என்னுரு புதிய கல்யாண மாப்பிள்ளைகளே! ஆடி மாதத்து உடுக்கைக் காரர்களே! கரகக்காரர்களே! அம்மன் வர்ணிப்புக் காரர்களே! வேப்பிலைக்காரிகளே! ஆடு கோழி வெட்டுகிறவர்களே! பொங்கலிடுகிறவர்களே! வேப்பஞ்சேலைக் காரர்களே! அம்மன் ஆவேசம் ஏறி ஆடுகிறவர்களே! கூழு வார்க்கிறவர்களே! ஆடி பதினெட்டாம் பண்டிகைக் காரர்களே! பச்சரிசி மாவுப்படையல் காரர்களே! செடில் குத்தியாடுகிறவர்களே! அலகேற்றிக்கொள்ளுகிறவர்களே! விகடன் உங்களுக்கென்று தான் ஆடி மாதத்துச் சங்கதியை அழகாகக்கொண்டு வந்தேனென்று வெகுகுஷாலாக இளிப்பீர்கள்! இல்லை இல்லை; அப்படி யொன்று மில்லை! விகடன் இந்த மாதத்திற்கு எந்தக் குடுமிச் சண்டையை, எந்தப் பொத்தல் புராணத்தை இழுக்கலாமென்று யோசித்துக் கொண்டிருக்கையில் ஆடி மாதமானது விகடனுக்கு முன்வந்து நின்று, சாமீ, விகடநாதனே! என்னைப்பற்றிக் கொஞ்சம் விநோதமாய்ப் பேசக் கூடாதாவென்று கும்பிடுபோட்டுக் கேட்டுக் கொண்டது! விகடன் ஆகட்டுமென்று அதற்கு உத்திரவு கொடுத்து விட்டு யோசித்துப் பார்த்தேன்! ஆடி மாதத்துச் சங்கதிதான் அடுத்தடுத்துச் சொல்லிப்போட்டிருக்கிறேன்! "ஆடி" என்கிற பேர் மீது கொஞ்சம் பிரசங்கம் பண்ணியும் இருக்கிறேனே! அது கொஞ்சமே தவிர அப்படியே முழுதும் தொனப்பி விடவில்லை. அநேக ஆடிகள் ஒரே மொத்தமாய் வந்ததிலே அத்தனை ஆடிகளும் என் சிற்றம்பலத்தில் (அதாவது பத்திரிகையில்) நிர்த்தனம் செய்ய இடம் போதாதென்று அப்போது கொஞ்சம் விட்டு வைத்திருந்தேன். அந்த சில ஆடிகளை என் அரைஞாண் கயிற்றில் கட்டி என் பலம்கொண்டவரையில் இழுத்துஇப்போது உங்கள் முன்கொண்டு வந்து நிறுத்துகிறேன்! கேட்கிறீர்களா? சொல்லட்டுமா? ஹீ! ஹீ! ஹீ!

ஃ

"வாதாடி"களின் சங்கதியை முதலிலே அவிழ்க்கிறேன்! இந்த வாதாடிகள் ஆதிகாலந் தொட்டு அநேகமா யிருக்கிறார்கள்! சிவன், விஷ்ணு, பிரம்மா முதலிய தேவர்கள், சில்லரை தேவர்கள், ரிஷிகள், முனிவர்கள் எல்லாம் வாதாடிகளா

கவே இருந்தார்கள்! மதத்திற்காக வாதாடிகள், கொள்கைக்காக வாதாடிகள், சத்தியத்திற்காக வாதாடிகள், உன்சாமி சிறியது, என்சாமி பெரிது, என்வேதம் தான் உண்மை, அதுகடவுளே வந்து சொன்னது, உன்வேதம் கட்டுக்கதை, புளுகு சங்கதி என்கிற வாதாடிகள், உன் கவியில் தப்பு, என் செய்யுளில் ஒப்பு என்கிற புலவ வாதாடிகள், அண்ட பிண்ட சாஸ்திர வாதாடிகள், தத்துவ சாஸ்திரவாதாடிகள், அர்த்தசாஸ்திர வாதாடிகள், ஜாதிமதக் கோட்பாட்டின் வாதாடிகள், ராஜ்யங்களைப் பிடுங்கிக்கொள்கிற அரசவாதாடிகள், இந்த அரசர்களுக்கே சுண்ணாம்பு தடவி யோட்டி விட்டுத் தாங்களே ஆளப்பார்க்கிற குடியரசு வாதாடிகள்,—முதலான பெருத்த வாதாடிகள் போக, ஒவ்வொரு வீட்டிலும் வாதாடிகளின் கூட்டம் இல்லாமலில்லை. ஒவ்வொரு கோவிலிலும், ஒவ்வொரு குடும்பத்திலும், ஒவ்வொரு தெருத்திண்ணையிலும் இவைபோன்ற எத்தனையோ வாதாடிகளைக் காணலாம்! இதிலே முக்கியமாய் லாயர்கள் தான் வாதாடிகள் என்று சொல்லிக்கொள்வதுண்டு. சட்ட புஸ்தகங்களை யெல்லாம் அப்படியப்படியே நெஞ்சுக்குள் தள்ளி விழுங்கி விட்டு அந்த லாயர்கள் பேசுகிற பேச்சு ஒரு குறித்த அளவிலே உலகுக்கும் ஒரு உபகாரமாக இருக்க, எந்த சட்டமும் தெரியாமலே பேசுகிற வாதாடிகளான தெருத்திண்ணைக் குட்டி லாயர்களின் சத்தம்தான் காது அடைத்துப்போகிறது!

ஃ

வாதாடிகள் சங்கதி இவ்வளவு போதும்! ஆச்சுதா! இனி இதற்கடுத்தாப்போல வாயாடி களின் சங்கதியை விகடன் விரிக்கிறேன்! வாயாடிகள் யார் தெரியுமா? அவர்கள்தான், எவர்கள்தான், நம்மை வயிற்றிலே தாங்கி பூலோகம் பார்க்க வெளியே அனுப்பிய அபூர்வ ஜெகன் மோகன சிருஷ்டிகள் தான்! அவர்கள் யாரென்றாலோ—பெண்டுகள் தானப்பா! ஒவ்வொரு குடும்பத்திலும் இந்த வாயாடிகள் இருக்கிறார்களய்யனே! வாயடி யடிக்க உட்கார்ந்து விட்டார்களானால் காலைப்பொழுது மாலைப்பொழுது ஆனதுங்கூடத் தெரியாமல் ரொம்ப குசாலாகத் தங்கள் வாயாடித்தனத்தை நடத்துவார்கள்! அதிலும் கல்யாண வீட்டிலே, கருமாதி வீட்டிலே, கட்டிக்கொண்ட கண்ணாளன் கும்மா குத்து கொழுக்கட்டைகள் தருகிறசமயத்திலே இந்த வாயாடிகளைப் பார்க்க வேணுமே! அது மெத்தமெத்த குசாலாய் இருக்குமப்பா! அதைப்பேசும் சினிமாவிலே எடுத்துக்கொண்டு காட்டினால் ரொம்ப வேடிக்கையா யிருக்குமப்பா! இந்தப்பெண் வாயாடிகளால் குடும்பமே தாறுமாறாய்க் கெட்டுப்போகிறது! இவர்களுக் கென்றேதான் "வாயாடி தேவி" என்கிற தேவதையை நாரதர் ஏற்படுத்தி வைத்திருக்கிறார் போலும்! அப்பப்பா! இந்த வாயாடிகளாலே உண்ணுஞ் சோறும் உடம்பி லொட்டாமல், விஷமாகிப்போய் எவ்வளவோ மனக்கஷ்டம் உண்டாகிறதடா அப்பா! புருஷன் ஒன்று சொன்னால் பெண்ஜாதி ரம்பை ஒன்பது பேச்சுப் பேசுகிறாள்! சவால் போடுகிறாள்! நம்மை விட்டால் இவனுக்கு வேறுதிக்கு கதியில்லை யென்கிற உள் மர்மத்தை மகா தெரிந்து கொண்டது போல மட மட வென்று வாயடி யடிக்கிறாள்! சாது குண புருஷன்களுக்குங்கூட இந்த வாயாடிகளால் அடங்காத கோபம் உண்டாகி விடுகிறது! ஐயோ! வாழ்க்கையே கசப்பாகவும் தோற்றி விடுகிறது. புருஷனுக்குக் கோபம்

எழும்ப எழும்ப பெண்ணின் வாயாட்டமும் ஜாஸ்திப்படுகிறது! கடைசியாக, இந்த வாயாடித்தனத்திற்குக் கிடைக்கிற இனாம் என்ன? அதுதான், எதுதான்? "வாயாரே வாயாரே எங்கே போனாய்?—கையாரிடத்தில் கடன் வாங்கப் போனேன்"—என்றபடி கும்மா—குத்து—கொழுக்கட்டை—உதை—கட்டையடி-மட்டையடி—துடைப்பம் செருப்பு அடி—மூக்குடைந்தது—கண்ணு உடைந்தது—காதறுந்தது—பல்லுடைந்தது—மண்டை யுடைந்தது—மார்படைத்தது—செத்தாளோ—இருக்கிறாளோ—என்கிற இனாம் வரிசைகள் பெற்றுக்கொள்கிறார்கள்! இவ்வளவு அடி உதையிலுங்கூட "என்னைக் குத்து, கொல்லு, அடபாவி, சண்டாளா, நீ நாசமாய்ப் போக" என்று வாயாடுகிறார்கள்! சில புருஷர்கள் வாயாடிப் பெண்களை—"வாயாட்டம் ஆடாதே ஆடாதே" என்று துடைப்பக் கட்டையினால் நெளிய நெளிய வாங்குகிறார்கள்! அந்தப் பூஜைப்படையல்களை வாங்கிக்கொண்டு அதோடே தாய் வீட்டுக்கோ அல்லது தெரிப்பட்டோ ஓடிப்போகிறார்கள்! இது தான் வாயாடித் தனத்தின் பிரதிபலன்! வாயாடிப் பெண்கள் நன்றாக நாலு பாக்கியத்துடனே பிழைத்து வாழவேண்டுமானால் அதற்கு மந்திரம் "மௌனம் கலக நாஸ்தி" என்கிற மந்திரத்தைக் கடை பிடிப்பது தான்! இந்த மந்திரத்தை விடாது ஜெபித்து வந்தால் இவர்களே பிறகு சிறந்த உத்தமிகளாய் விடுவார்கள்! அப்படிப்பட்ட—திருந்திப் போன உத்தமிகளும் அநேக குடும்பங்களில் இருக்கிறார்கள்! சிலருக்குக் கொண்டவனைக் கொள்ளி வைத்த பிறகுதான் வாய் அடங்கி வணக்கம் தோன்றி நல்ல புத்தியும் வருகிறது! சில குடும்பங்களில் அதை நிர்வகிக்கும் பெண்களின் பொறுமையாலும் மௌனத்தாலும் கலகப்படுகிற சங்கதியே இல்லாமற்போய் விடுகிறது! இதாச்சுதா? இதைச் சார்ந்தாற் போலவே இன்னொன்றையும் அவிழ்க்கிறேன்!

ஃ

அது யார் தெரியுமா? அது வம்பாடிகளின் சங்கதிகள்தான்! இந்தவம்பாடிகள் பெண்டுகளிலும் சிறு பிள்ளைகளிலும் உண்டு. இவர்கள் அற்ப சொற்பத்திற் கெல்லாம் வம்பாடுகிறார்கள்! கையில் துட்டு துக்காணி இருக்கட்டும், இல்லாமற் போகட்டும், இவர்களுக்கு அதைப்பற்றி அக்கரையேயில்லை! இதை வாங்கிக் கொடு, அதை வாங்கிக் கொடு, துணி வாங்கிக்கொடு மணி வாங்கிக் கொடு, நகை வாங்கிக் கொடு, நட்டு வாங்கிக் கொடு, நண்ணா சோறுகறிபோடு, தேர் பார்க்க வா, திருவிழா பார்க்க வா, வேடிக்கை பார்க்க வா, விருந்து வீட்டுக்கு வா, வரிசையெடு, வாழ்வு சாவிலே நண்ணா சீராய் செலவிடு, கொண்டான் கொடுத்தான் வீட்டுக்கு எளிதமாய் நடந்து கொள்ளக் கூடாது, நாலுபேரைப்போல் நாமும் இருக்கவேணும்—என்கிற வம்புகள் கொடுக்கிறார்கள்! இந்த வம்பு தும்பாலே குடும்பத்தலைவர்களுக்கு மெத்த கஷ்டங்களும் தொந்தரைகளும் நேரிட்டுப் போகிறது! இந்த வம்புக் காரர்களால் கடைசியாகச் சம்பவிக்கிறதென்ன? கடன் கார கந்தப்பன்களாக வேண்டியது தான்! கடன் ஜெயிலுக்குப் போக

---

சண்டை போட்டுக்கொண்டு பிரிந்த நண்பர்கள் மறுபடியும் வீட்டிற்கு வருகிறார்கள். பழகிப்போன தோஷம் அவர்களை வெறுக்க முடிகிறதில்லை. தன்னை மோசம் செய்த தாசியானாலும் அவளே தன் வீடு தேடி வருகையில் பாயஸ விருந்து உபசாரம்தான்.

வேண்டியது தான்! வாரண்டுகளை எதிர்பார்த்திருக்க வேண்டியதுதான்! ஐயோ! ஆண்டவனே! புருஷன் கஷ்டம் அறியாமல் பெண்கள் போடு கிற வம்புகளால் அவர்கள் வாழ்க்கையே கசப்பாய்ப் போகிறது! இது போக, சரியான சீர் வரிசைகள் கொண்டு வராத மருமகளிடத்திலே மாமிகள் வம்பாடுவது வேறே யிருக்கிறது! அதை யெல்லாம் என் நஞ்சான் குஞ்சான்களே நீள நீள நினைத்துப் பார்த்துக் கொள்ளட்டும்! இது போச்சுதா? இன்னென்று கேளுங்களப்பா என் ராஜாக்களே!

ஃ

அதென்ன?—அதுதான் வழக்காடி! விகடன் வழக்காடி என்றவுடனே கோர்ட்டு கச்சேரிகளெல்லாம் விகடனை முறைத்துப் பார்க்கிறது! விகடா! நீயும் ஒரு சமயம் என் உதவியைப் பெறவேண்டியிருக்கு மென்கிறது! அப்படி யெல்லாம் விகடன் இதுகளைப் பற்றி ஒன்றும் சொல்ல வரவில்லை! கோர்ட்டு கச்சேரிகளென்ருல் எல்லொருக்கும் தெரிந்த பாடு தானே! வழக்காடிகளின் வீடு, அல்லது வழக்காடிகளின் உத்தியோக சாலை,—இவைகளெல்லாம் தோற்பு கெலிப்பு என்கிற வைராக்கிய ஆட்ட மேடைகள் தானே! அவரவர்களுக்கே இது மனப்பாடமல்லவா? ஆம், ஆனல் வழக்காடிகள் என்ருல் கோர்ட்டுக் கச்சேரிகளில் மாத்திரம் அது தங்கியிருக்கிறதென்பதல்ல, உலக முழுதுக்குமே இந்த வழக்காடிகள் நிறைந்து போயிருக்கிருர்கள்! வீடுகளில் அப்பனுக்கும் மகனுக்கும்வழக்கு! ஆத்தாளுக்கும் மகளுக்கும் ரகசிய வழக்கு! மகன் பெற்ற குழந்தைகளின் பக்கம் பிரீதி வைத்துத் தான் பெற்ற மகனை வஞ்சித்து ஏமாற்றப் போக அந்த அநியாயச் சங்கதியிலே தாய்க்கும் குமாரனுக்கும் வழக்கு! அண்ணனுக்கும் தம்பிக்கும் வழக்கு! புருஷனுக்கும் பெண் ஜாதிக்கும் வழக்கு! மச்சானுக்கும் மச்சானுக்கும் வழக்கு! அக்காளுக்கும் தம்பிக்கும் வழக்கு! அண்ணிக்கும் மைத்துனனுக்கும் வழக்கு! பங்கு பங்காளிகளுக்குள் வழக்கு! தாலியறுத்தவளுக்கு எனக் கென்ன கதியென்கிற அறுப்புக் கூலி வழக்கு! செத்தவனுக்குக் கொள்ளி போட வழக்கு! விதவைப் பெண்ணுக்காக சம்பந்தி வழக்கு! தேசாந்திரியாய் எங்கேயோ ஓடிப்போன பையன்-அல்லது விபசாரியாய்ப்போன பெண் நடுவாந்தரத்தில் முளைத்துக்கொண்டு சொத்துக்கு வழக்கு! கூத்தியார் பிள்ளைகள் வழக்கு! அப்பனுக்குக் கஞ்சி வார்க்க வில்லை—ஆத்தாளுக்குச் சோறு போடவில்லை என்ற வழக்கு! சக்களத்திக்கும் சக்களத்திக்கும் வழக்கு! வேலைக்காரனின் சம்பளத்தைச் சரிவரத்தராமல் தப்புக் கணக் கெழுதி வாயில் போட்டுக் கொண்டு ஏமாற்றுகிற எஜமானின்மேலே வேலைக்காரன் கொண்டு வருகிற வழக்கு! தனக்குக் கலியாணமென்று சொல்லிப் பத்து மாத சம்பளத்தை முன்னதாகப் பெற்றுக் கொண்டு சிறுக்கியைக் கட்டிக் கொண்ட ஷோக்கிலே, அந்த எஜமானனைவிட்டு நம்பிக்கைக்குத்துரோகமாய் வேறு இடத்தில் வேலைக்கு அமர்ந்துகொள்ள, அந்த வேலைக்காரன் மீது விட்டேனே பார் என்று எஜமானன் கொண்டு வருகிற வழக்கு! கொடுக்கல் வாங்கல் வழக்கு! சாக்கு வாங்குவதிலே லேவாதேவி வழக்கு! வியாபாரக்குறி (Trade Mark) யில்

---

அந்த மனிதர் எனக்கு அதிக உபசாரம் செய்வதேன்? என்னிடத்திலுள்ள அன்பினலா? அல்லது என்னல் ஒரு காரியம் ஆக விரும்பியா? அல்லது என் கற்பை மென்று தின்றுவிடவா?

வழக்கு! கண்டிராக்ட் வேலையிலே வழக்கு! சாக்குக்கு சாக்கு மாறு பாடு வழக்கு! வியாபாரத்தைக் கெடுக்கிற வழக்கு! கோவில் வழக்கு! கோவில் சாமிகளில் வழக்கு! அந்த சாமிக்குப் போடுகிற வடகலை தென்கலை நாமத்து யூ—வய் (U-Y) அடையாள வழக்கு! மசூதி பள்ளி வாசல் பக்கம் ஹிந்துக்களின்மேளம் கூடாதென்கிற வழக்கு! கூட்டு வியாபார வழக்கு! குடும்பத்துக்கே சனியனாய் ஏற்படுகிற வழக்கு! தர்மபணத்தைக் கணக்கு பார்ப்பதிலே வழக்கு! ஜாதிக் கட்டுப் பாடு செய்து ஒருவனை விலக்குவதிலே அவன் மீசை முறுக்கிக் கொண்டு போடுகிறவழக்கு! மேல் ஜாதி கீழ் ஜாதி என்பதிலே வழக்கு! கள்ளுகடை மறியல், அன்னியத் துணி மறியல் என்பதிலே வழக்கு! புஸ்தகக் காபிரைட் (Copy Right) வழக்கு! இவை போல்வன இன்னும் ஆயிரம் வழக்காடிகளை விகடன் சொல்லிக் கொண்டேபோவேன்! ஆனல் பத்திரிகையில் இட மில்லை!

ஃ

இன்னெருவித ஆடியைப்பற்றிக் கேட்கிறீர்களா? அவர்கள் தான் "முறையாடி"கள்! இந்த முறையாடிகள் எவ்விடத்திலு முண்டு! முக்கியமாய் நாட்டுப் புறங்களிலே பள்ளிக்கூட வாத்திமார்கள் அந்தந்தக் கிராமத்தின் பெண்களுக்கெல்லாம் அப்பன் முறையாகக் கொள்ளப்படுகிறார்கள்! என் நாயினு, என்ன நாயினு, பையனை நன்ருய் அடித்துப் படிப்பு சொல்லு நாயினு வென்று முறை கொண்டாடுகிறார்கள். சில சமயங்களில் இந்த நாயினுக்கள் நல்ல அழகுக்காரிகளான பெண்களை அப்பிக் கொண்டுஅடுத்த ஊருக்குப் போய் விடுவதும்உண்டு! நாயினு அப்பா என்ற மாத்திரத்திலேயே அவர்களுக்குத் தேகத்தோடு ஒட்டிய காமம் விட்டோடிப் போகுமா? அதற்கும் ரகசியத்திலேயே வழி செய்து கொள்வார்கள்! இந்த நாயினுக்களின் சங்கதி இப்படியானல், கிராமபண்ணைக்காரன் கிராமத்தான், நாட்டாண்மைக்காரன் பெரியதனக்காரர்கள், —இவர்களெல்லாம் மாமன் முறையாகக் கூப்பிடப் படுகிருர்கள்! பட்டணங்களிலோ என்ன பிரதர், (Brother) என்ன சிஸ்டர் (Sister) என் அண்ணுத்தே, என்ன அண்ணுத்தே என்கிற முறையும், அப்பா, ஐயா என்கிற முறையும் அதிகமாயிருக்கிறது! இந்த பிரதர் என்கிற அண்ணு, சிஸ்டர் என்கிற தங்கை முறைகளோடே பிரஸங்க மேடைகளில் ஏறி அந்த அண்ணனும் பேச, இந்தத் தங்கையும் பேச, இந்தத் தங்கையை அந்த அண்ணன் அந்த சபையிலே ஆகாசத்தில் உயர்த்திச் சிலாகிக்க, அதிலே இந்த தங்கை தன் கல்வித் திறத்துக்கு மெச்சிய அண்ணு மீது பரம விசுவாசங்கொள்ள—கடைசியிலே இவ்விருவருக்கும் பழக்கம் கடிதப் போக்குகள் அதிகமாகிப் பின்பு திடீர் என்று இருவர் தேகத் துள்ளும் மறைந்து நிற்கிற "கேட்ட ஆவி" குபீரென்று கிளம்பிக்கொள்ள, அதில் அந்தரங்கத்திலே இந்த அண்ணுவும் அந்தத் தங்கையும் காதலன் காதலிகளாக மாறிவிட்டு, அண்ணுவிடம் வயிறு பெருத்ததைத் தன் நாயகனுக்கே கர்ப்பமானதாக ஏற்றி அலங்கோலப்பட்டுப் போய் விடுவதும், தன் மனைவியை இவ்விதம் வெளியில் நாகரீகமென்று அனுப்பிய புருஷன் பிறகு எல்லா கதையும் அறிந்து ஏமாறிப் போய் விடுவதும் இல்லாமலில்லை! ஸ்திரீ புருஷர்களுக்குள்ளே என்னதான் படிப்பு நல்லொழுக்கம் ஏற்பட்டிருந்த போதிலுங் கூட, அவர்களிடத்தில் காம விகாரம் என்பது எப்போதும் இருந்து வருவதினுலே, அதை யடக்கிச் சமாளிக்க

அவர்களுடைய படிப்பு வேதாந்தங்களாலும் சில சமயங்களிலே முடியாமல் நத்தளிப்புக்கு இடமாய் விடுவதினாலே, அன்னிய புருஷனும், அன்னிய ஸ்திரீயும் படிப்பு காரணத்தால் ஒருவரை யொருவர் கௌரவித்த போதிலுங் கூட, எச்சரிக்கையோடும் வெகு தூரத்தில் விலகியே நிற்க வேண்டு மென்பதை விகடன் இங்கு சொல்லாமலிருக்க முடியவில்லை! ஏனென்றால், அதிக படிப்பு பெற்ற ஆண் பெண்களில்தான் காம சிந்தனையும் அங்கசேஷ்டைகளும் அதிகமாய் ஊறிப் பெருக்கெடுத்துப் போகிறதென்பதையும், அதனாலே கெட்டுப் போன படித்த பாழுங் கட்டைகள் பலருண்டு என்பதையும் விகடன் இந்த அழுத்தமாய்ச் சொல்லி எச்சரிக்கிறேன்! ஆனாலும், எல்லா சோதனைகளுக்கும் தப்பி வெற்றி கொள்ளும் உத்தமர்களும் உத்தமிகளும் இருக்கிறார்களென்பதையும் விகடன் ஒப்புக்கொள்ளத் தடையில்லை! என்றாலும், நெருப்பு சுடு மென்பதை மறுக்க முடியாது தானே! அதிலும் காமச் சூடு செய்கிற கோரணிகள் இவ்வுலகிலே கொஞ்சநஞ்ச மல்லவே!

ஃ

இதிலும் ஈஸ் பீஸ் இங்கிலீஷ் வழக்கமாய் பிரதர்-சிஸ்டர்களோடே, என் சார், என்ன சார் என்கிற முறையும் பலத்துப் பேயிருக்கிறது! சிலரிடம் ஒஸே, ஒஸே என்கிற ஈன முறையும் வழங்கப் படுகிறது. சிலர் பிரசங்கம் பண்ணும்போது பிரியமானசகோதரர்களே, சகோதரிகளே என்று இலக்கணத்தில் முறையாடுவதும், பிறகு சாதாரணமாய்ப் பேசும்போது என் வே, என்ன-வே; ஒய் ஆய் என்று மச்சான் முறைபோல அழைக்கிறார்கள்! சிலர் அரே, ஒரே என்றும் கூப்பிடுகிறார்கள்! சிலர் அவள்-இவள் அவன்—இவன் என்றும் கேவல முறையாடுகிறார்கள்! சிலர் பிள்ளைக ளென்ற முறையாடுகிறார்கள்! உயர் குலத்தவரிலே சிறுவர் முதல் பெரியவர் வரையில் ஏண்டி—என்னடி—ஆத்துக்குப் போனண்டி--நேத்துக்கு வந்தாண்டி என்கிற "அடி" முறையாடுகிறார்கள்! சிலர் என் பாய், என்ன பாய் என்கிற பாயி முறையாடுகிறார்கள்! ஏன் மாமா, என்ன மாமா என்று முறையாடுவது உண்டு! இன்னொன்று! போக்கிரிகள், திருடர்கள் போலீஸ் சேவகரை, சாணம் அண்ணாத்தே, உங்க தயவுதான் அண்ணாத்தே என்று முறையாடுகிறார்கள்!

ஃ

இன்னொரு தமாஷான முறையைச் சொல்ல விகடன் மறந்து போனேன்! அதென்னவென்று கேட்கிறீர்களா! வெகு அசங்கிதமான முறை அது! பல கவுச்சி கடைகளிலும், வெகு வெகு ஒய்யாரமாய் மீன் பேரம் பண்ணுவதிலும், அங்கே மீன் திருடும்போதும் சண்டை உண்டாகி விட்டால் ஊம் மாப்பிளே—எம் மாப்பிளே என்ற சக்களத்தி முறையாடுகிறார்கள்! இனி மருமகப் பிள்ளை முறைகளும் வேறே யுண்டு! இந்த முறையாடிகள் இவ்வளவு போதுமென்று நிறுத்தி விட்டு, விகடன் இன்னுமான முறைகளை அடுத்த மாதம் சொல்லி முடிக்கிறேன். இவைகளெல்லாம் தமிழ் உலகத்து வினோதங்களப்பா! தெரிந்து கொள்ளப்பா! ராம்! ராம்! சுபம்!! சூ!! சுவாஹா!!!

---

பல நாள் தங்கி முடிவில் ஒரு கலகம் செய்து கொண்டு பிரியக்கூடிய சுபாவமுள்ள பந்துக்களை அதிகம் நெருங்கவைத்துக் கொள்ளாமல் ஒதுங்கிக் கொள்வதே மரியாதைக்கும் சமாதானத்துக்கும் நற்பெயருக்கும் வழியாகும்.




கொடிது கொடிது கோவிற் புகுதல்
அதனினுங்கொடிது (குழவி) கல்லே வணங்குதல்
அதனினுங்கொடிது உற்சவத்திற்குப் போதல்
அதனினுங் கொடிது கோயில் திருப் பணி
அதனினுங் கொடிது கும்பாபிஷேகம்
அதனினுங் கொடிது அந்தணர்க்கீதல் தானே. (குடியரசு.)

ஃ

தூரப்பிரிந்து போனாலும் அவள் எண்ணம் இவன் மேலே தானும்! இவன் எண்ணம் அவள் மேலே தானும்! இருவரும் தாங்கள் சந்தித்துப் பேசிக் கொண்டதை என்றைக்கும் மறக்க மாட்டார்களாம். மற்றவர்களும் இதை யறிய முடியாதாம்!

ஃ

அதது அவரவர்நெஞ்சுக்குள்ளே; வெளியிலோ வேறு தினுசாகவாம்!

ஃ

தன் கண்கள் வீட்டுக்குள்ளே எவரையோ ஆசையுடன் தேடுகிறது, ஆனால், அதை வெளியிலே சொல்வதில்லையாம்! ஃ

தன் காரியம் ஆகும் வரையில் பரம சாதுவாக எல்லோரின் இஷ்டப் படியும் நடக்க வேண்டுமாம். இது புது மாப்பிள்ளையிடம் கற்றுக் கொள்ளலாமாம்! ஃ

அதிகப்பட்ட நாணமே இருவரும் ஒருவரை யொருவர் பேசிக் கொள்ள முடியாமற் செய்து ஏங்க வைக்கிறதாம்! ஃ

வேசி யுறவும், வியாபாரியின் நேசமும் இரண்டும் ஒன்று போலத் தானும்! இருவருக்கும் காரியத்திலேயே கண்ணும்! ஃ

புண்ணிய யாத்திரை போகிறவர்களிடம் வாத்து—கோழி முட்டைகளோடு பிராந்திபுட்டியு மிருந்தால் பிரயாணம் வெகு சுகமாயிருக்குமாம்!

ஃ

அவரவர்களுக்குச் செய்யத் தெரிந்த வேலையை அவரவர்கள் வெளியிலே காட்டிக் கொள்ள மாட்டார்களாம். ஆனால், அதற்கு அடையாளங்களை மட்டும் உண்டாக்கி விடுவார்களாம்! ஃ

ஒரு தினத்துச் செலவிலே ஒரு காசு குறைக்க முயலுகிறவன் தான் அடுத்த நிமிஷம் ஒரு பணத்தை வீண் சங்கதியிலே செலவிட்டு அதற்கு ஒரு சமாதானமும் சொல்லிக்கொள்வானும்! ஃ

வில்லில் தொடுப்பது அம்பு
தானியத்தில் ஒன்று கம்பு
பத்துபேர் சேர்வது கும்பு
ரத்தினத்தில் உயர்ந்தது கெம்பு
மாடுகளுக்கிருப்பது கொம்பு
கைகழுவ உதவுவது செம்பு
பெரியோர் சொல்வது நம்பு
வீணர் பேசுவது வம்பு.

### எது நன்று?

கற்கை நன்றே—கற்கை நன்றே
பிச்சை புகினும்—கற்கை நன்றே

என்ருர் அந்தக்காலத்திய அதிவீராமபாண்டியர். அப்படியல்ல, இந்தக் காலத்திய விகட வீராமபாண்டியர் சொல்வதாவது:—

1. ஆயிரம் பேர்களை அறக் கொல்லா வைத்தியன்—பேய்வாழ் சுடலையில் பிணஞ்சுடல் நன்று.

2. பஞ்சாங்கம் சொல்லிப் பயங் காட்டாதவன்—கெஞ்சா தம்மடித்துக் கிடப்பது நன்று.

3. வாத்தியார் வேலையில் வரும்படி யில்லாதார்—கூத்தி வேடத்தைக் கொள்வது நன்று.

4. காரிகை கற்றுக் கவிபாடுவதிலும்—பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்று. (தொடரும்)




1. ஒவ்வொரு பயின்ட் (20 அவுன்ஸ்) கடல் தண்ணீரில் ½ அவுன்ஸ் உப்பு இருக்கிறது. சமுத்திரத்திலுள்ள எல்லா உப்பையும் உலகத்திலுள்ள தேசங்கள் முழுமைக்கும் 60 அடி உயரமளவுக்குக் குவிக்கலாமாம்.

2. சாதாரண ஒரு உருளைக்கிழங்குக்குள்ள போஷணை சக்தி நான்கு பிடி சக்கரைக்கு இருக்கிறது. அரை பவுண்ட் வெண்ணெய்க்குள்ள போஷணசக்தி ஒரு பவுண்ட் சக்கரை கொடுக்குமாம்.

3. சாதாரணமாக எண்ணுவதைவிட கோச் வண்டி சமீபகாலத்தில்தான் கண்டுபிடிக்கப்பட்டது. 1564-வருஷத்தில்தான் முதன் முதலில் கோச்வண்டி செய்யப்பட்டதாம்.

4. டெல் போகிருப்—என்ற ஒரு நவீன இயந்திரம் கண்டுபிடித்துள்ளார்கள். இதனால் டெலிபோனில் மற்றோரிடத்திலிருந்து வரும் செய்திகளை அதனுள் உள்ள ஒரு நாடாவில் அச்சடித்துக்கொள்ளுகிறது. இதன் மூலம் ஆள் இருக்காவிடினும் வரும் சமாச்சாரங்கள் அந்த நாடாவில் அச்சடிக்கப்படுகின்றதாம்.

5. மிருகங்களில் 2702-வகைகளும், பட்சிகளில் 9818-வகைகளும், மீன்களில் 7328-வகைகளும், மரம் செடிகளில் 2-லக்ஷம் வகைகளும் இருக்கின்றனவாம்.

6. சுருட்டை ஒருதரம் பிடித்துவிடும் புகையானது மேகத்தோடு கலப்பதற்கு முன்பு 10 மைல் உயரம், அகலம், நீளமுள்ள ஆறு சம பக்கங்களுள்ள கனவடிவத்தை நிரப்புவதாக விரியுமாம். உலகத்திற்குரிய வஸ்தில உலகத்தைப்போல் அவ்வளவு பெரியதாக இருப்பினும் ஒரு சிறு பெட்டியில் அடக்கக்கூடியதாயும் சுலபமாக ஒரே கையில் தூக்கிச் செல்லக்கூடியதாயுமிருக்குமாம்.

7. போப் வைத்திருக்கிற ரத்தினங்கள் பதித்த கெடியாரமே உலகத்தில் மிக விலையுயர்ந்ததாம். அது 60,000) பவுன் (ரூ. 900,000 விலையுள்ளதென்று மதிப்பிடப்படுகிறது.

8. பாரசிக தேசத்தின் அரசருடைய நகைகளைக் கணக்கிடுவதற்காக பிரான்ஸ் தேசத்து நிபுணர்களை ஏற்படுத்தியபோது, அந்த நகைகளில் ரத்னங்கள், மரகதங்களும், முத்துகளும், வைரக்கற்களும் இருக்கின்றனவென்றும், மரகதங்கள் 13-ராத்தல் எடையுள்ளதென்றும், அவைகளுள் பெரியது 78,000 டால்லர் (234,000 ரூ.) மதிப்புள்ளதென்றும், ஒரு முத்துமாலை 100,000 டால்லர் (300,000 ரூபாய்) மதிப்புள்ளதென்றும், "டெரியானூர்" என்ற மதிப்பிடமுடியாத கற்களாக இருப்பதால் வைரக்கற்களின் மொத்த மதிப்புவிலை இவ்வளவு என்று நிர்ணயிக்க முடியவில்லை என்றும் சொல்லுகிறார்கள்.

9. மனிதர்களின் இருதயம் 9½ அவுன்ஸ் (23¾ ரூபாய்) எடை உள்ளதாம். அது அவரவர்களின் முஷ்டி அவ்வளவு பெரியதாக இருக்கிறதாம்.

10. 2000 பவுன் (30,000 ரூ.) செலவிட்டு 20 வருடங்களாக வேலை செய்து பொம்மைக்காக ஒரு வீடு கனம் பாட்டி என்பவர் டிரின்டிங்டனில் கட்டினாராம். அதைக்கட்ட 1908 ஜனவரி மாதம் ஆரம்பிக்கப்பட்டது. 100-வெவ்வேறுவிதமான

வேலைப்பாடுகள் அவ்வீட்டில் செய்யப்பட்டிருக்கின்றனவாம். அதில் பரப்பியுள்ள நான்கு இரத்தின சமக்காளங்கள் நாளொன்றுக்கு 8 மணி வீதம் 2 வருடங்களாக நெய்யப்பட்டனவாம். ஒவ்வொன்றும் 2,400,000 இழைகள் கொண்டதாம். ஒவ்வொன்றும் 50 பவுன் (750 ரூ.) விலையுள்ளதாம். அதனுடைய சாவி பொன்னால் செய்யப்பட்டதாம். அதை ஒரு தபால் பெட்டியில் போட்டதும் அது மணி ஒன்றை அடித்து, ஒரு ஸ்பிரிங்கைத் தளர்த்துகிறதாம். உடனே அவ்வீட்டின் கதவு திறக்கப்படுகிறது. அதேசமயத்தில் வீடுமுழுவதும் எலக்டிரிக் விளக்குகள் எரிய ஆரம்பிக்கின்றனவாம். அவ்வித விசையாலேயே ஒவ்வொரு கதவும் ஒவ்வொரு பெட்டியும் திறக்கப்படுகிறதாம். ஒவ்வொரு அறையும் எலக்டிரிக் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு, எலக்டிரிக் நெருப்பாலேயே சூடு உண்டாக்கப்படுகிறதாம். மிகவும் வேலைப்பாடுகள் வாய்ந்தது. ஹாயி XIV அறையாம். அவ்வறையிலுள்ள எல்லா சாமான்களும் 22 காரட் பொன்னால் செய்யப்பட்டுள்ளனவாம். மேஜைகளில் உயர்ந்த முத்துக்கள் பதிக்கப்பெற்றிருக்கின்றனவாம். அதிலுள்ள பியானோ 3¾ அங்குலம் உயரமாக இருக்கிறதாம். இரண்டு சைனு அலங்காரங்கள் 100 பவுன் (1500 ரூ.) விலையுள்ளதாம். அரசியாகிய ஆன் என்பவருடைய சாப்பிடும் அறையின் தரையில் விலையுயர்ந்த அழகிய கற்கள் பரப்பியுள்ளதாம். அதிலிருக்கும் வாசகசாலையில் சுமார் 100 புத்தகங்கள் இருக்கின்றனவாம். ஒவ்வொரு புத்தகமும் சாதாரண தபால் பில்லைகளில் பாதி அளவு அவ்வளவு சிறியதா யிருக்கிறதாம். ரகசியமான ஒரு அறை அதில் இருக்கிறதாம். பாட்டி ஒருவருக்குத்தான் அதைத் திறக்கத் தெரியுமாம்.

11. தண்ணீரைத் தவிர்த்துப் பார்க்கில் தேநீர்பானம்தான் விலையில் மிகக் குறைந்ததாம். ஒரு பவுண்டு எடையுள்ள தேயிலையில் 200 கிண்ணம் தேத்தண்ணீர் செய்யலாமாம்.

12. 'விப்பட்'—என்பதே மிக்க வேகமுள்ள மிருகமாம். அது மணிக்கு 40 மைல்களுக்கு அதிகமாக சஞ்சரிக்கிறதாம். மனிதனுள் மிக்க வேகமாக ஓடுபவன் மணிக்கு 20-க்குமேல் ஓடக்கூடவில்லை. பந்தயக் குதிரை 30—40 மைல்கள் ஒரு மணிக்கு ஓடக்கூடுமாம்.

13. இரட்டைக் குழந்தைகள் பிறப்பதை சில ஜாதியார் அதிர்ஷ்டமுடையதென்றும், வேறு சிலர் துரதிர்ஷ்டமென்றும் கருதுகிறார்கள். மடாபிஸியிலுள்ளவர்கள் இரட்டைக் குழந்தை பிறப்பது துஷ்டதேவதைகளின் செயல் என்று கருதப்படுவதால் அக்குழந்தைகளைப் பிறந்ததும் கொன்றுவிடுகிறார்கள். மாசெய் தேசத்தார் இரட்டைக் குழந்தைகளை வரவேற்கின்றனர். மற்ற ஜாதியார் அக்குழந்தைகளைப் பெற்ற தாயாருக்கு வெகுமதி தந்து பெருமை செய்கிறார்கள்.

14. உலகத்திலுள்ள பழைய காலத்து தேசியக்கொடி டென்மார்க் தேசத்தது. 1219ஆ முதல் அதை உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது.

15. ஜப்பானியர் முதன்முதலில் கப்பலை ஓட்ட ஆரம்பிப்பதில் அழகிய ஓர்வழியை அநுஷ்டிக்கின்றனர். கப்பலின் முன்பாகத்தில் ஒரு கூண்டு நிறைய பக்ஷிகளைத் தொங்கவிடுகின்றனர். கப்பல் புறப்பட ஆரம்பித்ததும் ஒரு கயிறு இழுக்கப்படுகிறது. கூண்டு திறந்து கொள்கிறது. பக்ஷிகள் உடனே ஒரு அற்புதமான சந்தடியுடன் பறக்க ஆரம்பிக்கின்றன. அதன் கொள்கையாதெனில் கப்பல் புறப்பட்டதும் பக்ஷிகள் அதனை வரவேற்பது போலாம்.

P. G. குலசேகரன்.

# டிரஸ்டி நியமனம்



ஒரு தர்ம ஸ்தாபனத்தைப் பரிபாலித்து நடத்தி வருவதற்காக ஒருவரை டிரஸ்டியாக மனஸ்பூர்வமாக நியமிக்கிறார்கள். இவ்விதம் நியமிப்பதில் பரம்பரையாக சந்ததி பாத்தியதையுடன் டிரஸ்டியாக இருந்து பரிபாலித்துவரும்படியும் நியமிப்பதுண்டு. இவ்விதம் நியமித்து அநேக வருஷங்கள் கடந்த பின்பு அந்த டிரஸ்டியை ரத்து செய்வதாகில் பின்வரும் டிரஸ்டி சட்ட சம்பந்தமானவைகளைக் கவனிக்கவேண்டும்.

ஃ

ஒரு டிரஸ்டியானவர் அடியில் கண்டவாறு தன்னுடைய ஸ்தானத்திலிருந்து விலக்கப் படலாம். வேறே விதமாய் விலக்கப் படுவதற்கில்லை.

1. அந்த டிரஸ்டி அடியோடே நின்று விடவேண்டும். (அதாவது அற்று விட்டிருக்கவேண்டும்.)

2. டிரஸ்டியின் கீழ் தன்னுடைய கடமைகள் அனைத்தும் முடித்திருக்க வேண்டும்.

3. அந்த டிரஸ்டி பத்திரத்தில் கண்டிருக்கிற பிரகாரம் அதன் நிபந்தனைகளை அனுசரித்து அதன் கொள்கைகளை மீறினதற்காக நீக்கப் படலாம்.

4. கோர்ட்டார் பிரவேசித்து டிரஸ்டியின் அக்கிரமச் செய்கையைத் தடுக்கவேண்டி மற்றொருவரை நியமிப்பது.

5. டிரஸ்டியும், டிரஸ்டியினால் எவர்களுக்கு நன்மை ஏற்பட்டிருக்கிறதோ அவரும், அப்படிப்பட்ட நபர்கள் பலர் இருக்கும் பக்ஷத்தில் அவர்கள் அனைவரும் சேர்ந்து ஒப்புக் கொள்வதின் பேரில் நீக்கப் படுவது. (அதாவது டிரஸ்டி ஒருவர் மட்டுமே கையெழுத்திடுவது செல்லாது. நீக்கவும் நியாயமில்லை. அந்த டிரஸ்டியினால் பயன் பெறும் நபர்களும் சம்மதித்துக் கையெழுத்திட வேண்டும். அங்ஙனம் அவர்கள் சேர்ந்து கையெழுத்திட்டிராவிடில் அது பிரயோஜன மற்றது ; செல்லாது.)

6. கோர்ட்டாரிடம் கொடுக்கப்பட்ட மனுவினால் விசாரணையின் பேரில் நீக்கப்படுவது.

ஃ

டிரஸ்டியையே ரத்து செய்வதற்கு மூன்று வழிகள் தானுண்டு. அதாவது :—

1. டிரஸ்டியினால் பயனடைந்த எல்லா நபர்களும் சேர்ந்து ஒப்புக் கொள்ளவேண்டும்.

2. ஒரு டிரஸ்டியானது ஒரு பத்திர மூலமாக ஏற்பட்டிருக்கும் பக்ஷத்தில், அந்தப் பத்திரத்திலேயே டிரஸ்டை நீக்குவதற்கு டிரஸ்டின் சொந்தக்காரருக்குப் பாத்தியதை அல்லது உரிமை நிறுத்திவைக்கப்பட்டிருக்க வேண்டும்.

3***** ஃ

இவ்விதமாக நீக்குவதற்கான யாதொரு உரிமையையும் டிரஸ்டி பத்திரத்தில் நிறுத்தி வைத்துக் கொள்ளாமலே டிரஸ்டியை நியமித்து யாவும் அந்த டிரஸ்டியிடம் ஒப்புவித்து விட்ட பின்பு, பல வருஷங்களுக்கு அப்பால் அந்த டிரஸ்டியை நீக்குவதென்றால் அது செல்லாது.

# சென்றுபோன நாட்கள்.

## ராவ்பகதூர் க. வீரேசலிங்கம் பந்துலுகாரு.



இந்தியா தேசத்து இணையிலா மகான்களி லொருவரான கனம் வீரேசலிங்கம் பந்துலு அவர்களைப்பற்றிக் கேட்டறியாதார் அநேகமாய் இல்லை யென்றே சொல்லலாம். மானுடன் ஜீவியப் பிரவர்த்திகளில் ஜெயத்தை அடைவதற்கு அவனது நல்லூக்கம், பரிசுத்த இருதயம், ஆத்ம விஸ்வாசம் ஈஸ்வரபக்தி இவைகள் சாதனங்களா மென்பதை பந்துலு அவர்களின் ஜீவியம் வலியுறுத்துகின்றது. திரிகரண சுத்தியோடு மனோ வாக்கு காயங்களால் தாம் எடுத்துக் கொண்ட நற்கருமத்தை செய்யத் தகும் மானுடரே தப்பாமல் ஜீவிய பரமார்த்தத்தை அடைகின்றனர். பந்துலு அவர்களின் ஜீவியத்தை இதற்குத் திருஷ்டாந்தமாகக்கூறலாம். இம்மை மறுமைகளில் மேன்மைப் பலன்களை அடைய விரும்பும் மானுடர்களுக்கு பந்துலு அவர்களின் ஜீவியம் சிறந்த வழி காட்டியாமென்பதும் மிகையாகாது. ஃ

தேகசிரமத்தையும், பிறரால் தமக்கு ஏற்படும் வசைச் சொல், நிந்தனை, தீங்கு இவைகளைக் கருதாது என்ன இடையூறுகள் நேரிடினும் அவைகளைப் பொறுமையுடன் சகித்து எல்லா சோதனைகளையும் வென்று தாம் எடுத்துக் கொண்ட காரியத்தை சாதிப்பவர்களன்றோ மகான்களாவர்.

அத்தகைய மகானான பந்துலு அவர்களின் ஜீவியக் குறிப்புகள் சிலவற்றை இங்கு வரைவோம்.

பந்துலு அவர்கள் ஆந்திர தேசத்தில் கீர்த்தி வாய்ந்த கந்துகூரி வம்சத்தில் பிறந்த பிராம்மண சிரேஷ்டர். இராஜமகேந்திரவரத்தில் 1848-ம் வருஷம் ஏப்ரல்மாதம் 16ந் தேதி அவதரித்தார். ஃ

ஆந்திர ஜாதியை மேன்மைப் படுத்தப் பாடு பட்டவர்களில் முதன்மையானவர் பந்துலு அவர்களேயாகும். ஆந்திர தேசத்தில் நடந்த சீர்திருத்தங்களே பந்துலு அவர்கள் தமது ஜீவிய பரியந்தம் ஆந்திர ஜாதியபிவிருத்திக்குப் பாடு பட்டதை நன்கு விளக்குகின்றன. அவரது வாழ்க்கையின் மேலான குணங்களும் தூய நடவடிக்கைகளும் அவர் எழுதியுள்ள 800 பக்கங்கள் கொண்ட தமது சொந்த சரித்திரத்திற் காணலாகும். நம் மிந்தியா தேசத்து ஜன சமூகத்தை அபிவிருத்தி செய்தவர் இராஜா ராம் மோகனராய் ஆவர். நமது ஆந்திரஜாதியை உத்தரித்தவர் பந்துலு அவர்களே. ஜன சமூகத்தைப் பீடித்துக் கொண்டிருந்த துராசாரப் பிசாசங்களான கொடிய வழக்கங்களை ஓட்டுவதற்கு அவர் தமது சர்வ சக்தியையும் உபயோகித்து பிரஜைகளிடத்தில் ஒரு நூதன உணர்ச்சியை உண்டாக்கி ஜாதீய தர்மத்தை நிர்மாணித்தார். துர் நீதிகளையும் துராசாரங்களையும் கண்டித்து அவர் எழுதியுள்ள பரிகாசக் கூற்றுகள் அடங்கிய பெருந் தொகுதியே இதற்கு அத்தாட்சியாகும்.

இரண்டு மூன்று நூற்றுண்டுகளுக்கு முன்னர் சமூகத்தினது தாழ்ந்த நிலைமையின் காரணத்தால் மனுஷஸ்வாதந்திரியத்திற்குஏற்பட்ட பங்கத்தை தற்காலத்தவர் அறியாமலிரார். மேற்போந்த ஸ்வாதந்திரியத்தை நிலைநிறுத்தற் பொருட்டு பூர்வாசாரங்களை அதிக்கிரமிக்கிறவர்களுக்குத் தங்க நிழல் கிடையாத நாடாயிருந்தது நம் தேசம். வசிப்பதற்கு வீடும், குடிப்பதற்குத் தண்ணீரும் சிறுதொழில் செய்ய வேலையாட்களும் அன்னோருக்குக் கிடைப்பது அருமை. இந்நிலைமையிலும் பெண்கல்வி, விதவா விவாக இவைகளைக் குறித்த பந்துலு அவர்களது அரும்பாடுவீணுகாமல் நற்பயனே யெய்திற்று. விதவா விவாகம் செய்தவர்களும் அது நடப்பதற்குத் துணையா யிருந்தவர்களும் பட்ட கஷ்டங்களை பந்துலு அவர்கள் தமது சொந்த சரித்திரத்திற் செவ்வனே விளக்கியுள்ளார். கொண்ட பிடியை யாவர் எதிர்த்தபோதிலும் விடாத தீரர். ஜாதிபிரஷ்டம், பந்துக்கள்பிரிவு போன்ற அநேக கொடுஞ் சோதனை கட்குட்பட்டார். அநாதைகளான விதவைகளை மேன்மைப் படுத்த பந்துலு அவர்கள் செய்த விதவா விவாகப் பிரயத்தனங்கள் ஆந்திர தேசத்தில், ஏன் நம் இந்திய நாட்டிலும் அவருக்கு என்று மழியாக் கீர்த்தியை ஸ்தாபித்துள்ளது. வங்காள தேசத்திற்கு பண்டித ஈஸ்வர சந்திர வித்தியாசாகரர் செய்த பேருபகாரத்தைப் பந்துலு அவர்கள் ஆந்திர தேசத்திற்குச் செய்தார். இக்காரணம்பற்றியே அவர் தென்னிந்தியா வித்தியாசாகரரென வழங்கப் படுவதாயினர். எல்லா விதகஷ்டங்களையும் அனுபவித்து ஆந்திர தேசத்தில் விதவா விவாகத்தை வியாபிக்கச் செய்த பந்துலு அவர்களின் தைரியசாகசங்கள் நம்மனோரால் வர்ணிக்கபாலதன்று. இராஜமகேந்திரவரத்தில் அவர் ஸ்தாபித்துள்ள விதவாசிரமமும் அவரது நற்புகழை நிலைக்கச் செய்யும் ஞாபகச் சின்னமாகும். சமூக க்ஷீணத்தின் போது ஜாதி மேம்பாடுகள் ஏற்பட்டு மேல் வகுப்பாரெனக் கருதப்படுவோர் கீழ்வகுப்பாரை வருத்திக் கொண்டு வந்ததையும், இதுபோன்ற இதர துராசாரங்களையும் நீக்கவேண்டி இராஜாராம் மோகனராய் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட பிரம்மசமாஜ மதத்தை அவலம்பித்து ஏக ஈஸ்வர உபாசனையை மேற்கொண்டு அம்மத வியாபகத்திற்குப்பெரும்பாடுபட்டார்பூணூலைக் களைந்து பிராம்மண ரல்லாதாருடன் ஏகமாய்க் கலந்துண்டு சகல மதங்களுக்கும் மூலாதாரக் கொள்கையான மானுட சகோதரத்வத்தையும் ஈஸ்வர பித்ருத்வத்தையும் காரியரூபமாகக்காட்டினர். சொல்லுதல்யார்க்கு மெளிதாம் அரிதாம் சொல்லிய வண்ணஞ் செயல்—என்றதற்கிணங்க தற்காலத்து வாக்குக்கும் செயலுக்கும் அதிக வித்தியாசம் காணுவது சகஜமே யாயினும் பந்துலு அவர்கள் வாக்கில்சொன்னதை காரியரூபமாய்க் காட்டிப் பிரஜைகளது சன்மானத்திற்குப் பாத்திரரானர். ஃ

இனி பந்துலு அவர்களின் நூலறிவைக் கவனிப்போம். அவர் ஆந்திர இணையிலா பாண்டித்ய முடையவர். நூலெழுதுவதில் அபார சக்தியுடையவர். இளம்பருவத்தில் 5, 6 வகுப்புகளில் வாசிக்கும்போதே நூல்கள் எழுதத் தொடங்கி அநேக பிரபந்தங்களை எழுதி யுள்ளார். பாஷையின் பலதுறைகளிலும் கீர்த்தி வாய்ந்தவர். கவிகள், கட்டுரைகள், நாடக காவியங்கள், பரிகாசக் கூத்துகள், நாவல்கள், வசன காவியங்கள் இவைகள் ஒவ்வொன்றிலும் அவரது நூல்கள் பெயர் வாய்ந்திருக்கின்றன. 26-ம் வயதில் விவேக வர்த்தனி யெனும் பத்திரி

கையை ஆரம்பித்து சிலகாலம் அப் பத்திரிகையை சமர்த்துடன் நடாத்தி வந்து அதைத் துர்ஜனங்களுக்கு அங் குசமாகச் செய்தார். சிந்தாமணி என்ற மாதாந்திரப் பத்திரிகையை நடத்தி பாஷாசேவை செய்ததுந் தவிர, அறிவை விருத்திசெய்யும் நூல் கள் பல எழுதி ஆந்திர பாஷைக்குப் பேருபகாரம் செய்துள்ளார். அவர் எழுதியுள்ள நூல்கள் பத்துப் பெரிய வால்யங்களாகப் பிரகாசிக்கின்றன. நூல்களினது எளிய இனிய நடை வாசகர்களுக்கு உற்சாகத்தை ஊட்டு வதுமன்றி அவரது நூற்றிறமை அந் நூல்களில் வெள்ளிடை மலைபோல தெள்ளிதிற் கிடக்கின்றது. அவரது நூல்களில் மேலானதாகக் கருதப் படும் ஆந்திரப் புலவர் சரித்திரமும் ஆந்திர தேசத்து நாவல்களில் சிறந்த தாய் ராஜசேகர சரித்திரமும் ஆந்திர பாஷைக்கே திலகமென விளங்கு கின்றன.

சென்னைமா நகரில் கவர் மெண்டாரால் நடத்தப்பெறும் இராஜதானிக்கல்லூரியில் தெலுங்கு பண்டிதராக 50-ரூபாய் மாதச் சம்ப ளத்திலிருந்தும் அவர் செய்த மகத் தான காரியங்களும் தானதர்மங்க ளும் மஹா நல்லுபதேசத்தை அளிக்கின்றன. பந்துலு அவர்கள் எழுதிவைத்துள்ள ஹித காரணி சமாஜ தான சாசனத்தில் 41,500-ரூ பாய் மதிப்புள்ள தமது ஆஸ்தியை பொது ஜன உபயோகத்தைக் கருதி தானம் செய்திருக்கிறதாகத் தெரிகி றது. டவுன் ஹால், ஆசார சீர் திருத் தமண்டபம், பிரம்ம மந்திரம், ஹித காரணி உயர்தரப் பாடசாலை அனந் தாஸ்ரமம், பொதுவாசகசாலை, போன் றவைகள் அவரது தான சின்னங்க ளாக இராஜ மகேந்திரவரத்தில் மிளிர் கின்றன. ஜீவியபரியந்தம் மித வாழ்க் கையையே மேற்கொண்டு இத்துணை மதிப்புள்ள ஆஸ்தியை தமது நூல் கள் வாயிலாக சம்பாதித்து சுய நலங் கருதாது ஹிதகாரணி சமாஜத்திற்கு தானம் செய்து தர்மவான்களுக்குப் போதிய வழி காட்டியுள்ளார்.

ஃ

பந்துலு அவர்களின் என்றுமழி யாக் கீர்த்திக்குத் துணையாயிருந்தவர் அவரது மனைவியான இராஜலட்சுமி அம்மையாராகும். எல்லா வழிகளிலும் கணவரைப் பின்பற்றி நடந்து அவ ருக்குத் துணைப்பட்டு அவர் கொண்ட கோரிக்கைகளை காரிய ரூபமாக நிறை வேற்ற சாதனமாயிருந்தவர் அவ்வம் மையே. பாரத ஸ்திரீகள் எவ்வாறு நடக்க வேண்டுமென்பதைத் தமது நடவடிக்கையிலேயே நன்கு காட்டி யுள்ளார். சதிபதிகள் இருவரும் மேடைகளில் நின்று பிரசங்கம் செய்ப வர்களன்று. தாம் சத்தியமென்று நம் பின ஒவ்வொரு கொள்கையையும் என்ன தடைகள் நேரினும் விடாப்பி டியுடன்காரியரூபமாக நடத்திக்காண் பித்தனர். பந்துலு அவர்கள் சமூகம், பாஷை இவைகளுக்குச் செய்த சேவையை அங்கீகரித்தே நமது காருண்ய கவர்ன்மெண்டார் அவர்க்கு ராவ் பகதூர் பட்டமளித்து சன் மானித்தனர். ஃ

சென்ற 1919-ம் வருஷம் வேனிற் காலத்தில் பந்துலு அவர்கள் மிகத்தளர்ந்த வயதில் தேக பலஹீனத் தோடு ஆந்திரப் புலவர் சரித்திரம் இரண்டாம் பதிப்பை அச்சடிக்க வேண்டி சென்னைக்கு வந்தார். இந் நிலையிலும் அவர்செய்த பாஷாசேவை என்றும் மறக்கப்படுவதன்று. விஷு சு பீடிதராய் மேமாதம் 27-ந்தேதி காலையில் 4-30மணிக்கு எழும்பூரில் பரமன் திருவடி நீழலெய்தினர்.

---

# அகங்காரத்வ சிந்தை



வாலிபர்களிற் சிலர் தாம் இனி கற்க வேண்டியவை ஏதுமில்லை யென்றும் எல்லாம் தமக்கு வந்து விட்டதென்றும் அகங்காரப் படுகின்றனர். எந்தத் தொழிலும் தம்மால் செய்ய முடியுமென்றும், தமது ஸக்தி அபாரமென்றும் எண்ணிக் கொள்கின்றனர். பிறருக்கு ஆலோசனை சொல்லத்தக்க உயர் நிலைக்குத் தாங்கள் எட்டி விட்டதாய் இறுமாப்பு மிகுகின்றனர். புத்திசாலிகள் எழுதிய நூல்களை யெல்லாம் பழித்துப்பேசி குற்றங்களை எடுத்துக் காட்டுவதில் அதி சூரர்களாய் விடுகின்றனர். அவர்கள் எழுதும் கடிதத்தை வாசிப்பதற்கு அதிலுள்ள இலக்கணச் சொற்களுக்குப் பொருள் விளங்காமல் அகராதியைத் தேடவேண்டி வருகிறது. அவர்களால் நவீனமாக சிருஷ்டிக்கப்பட்ட தங்கள் அகராதியிலும் அகப்படுவது அரிதாய் விடுகிறது. இரவு பகல் உழைத்துத் தங்கள் நூலைத் தயாரித்த கிரந்த கர்த்தர்களெல்லாம் அவர்களுக்கு அல்பமாகப் படுகின்றனர். எந்தப் பத்திரிகையையும் எந்தப் புஸ்தகத்தையும்முற்றிலும் வாசிப்பதேயில்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாகப் படித்துவிட்டு, அதில் என்ன இருக்கிறது—ஒரு மண்ணுமில்லைஎன்கின்றனர். புஸ்தகங்களைமட்டும் பீரோவில் அடுக்கடுக்காக அடுக்கிக்கொண்டு வருவோருக்கெல்லாம் காண்பித்துத் தின் பருமையை வெளியிட்டு தங்க மகிழுவர். இது ஒருவித அகங்காரத்வம். ஃ

ஸதாகாலமும் கோர்ட் தஸ்தாவேஜிகளை வைத்துக்கொண்டு என்னை ஜெயிக்க எவராலாகும் என்று சிலர் அகங்காரப் படுவர், ஒவ்வொன்றுக்கும் சரியான ஆதரவு வைத்திருக்கும்போது எப்படி என் வழக்கும் தோற்றுப் போகும் என்று சொல்லி இனி நியாயாதிபதி செய்யவேண்டிய தீர்ப்பைத் தாங்களே செய்து கொண்டு அகங்கரிப்பர். எவளோ தன் கணவனுக்கு வேண்டிய தூரபந்து ஒருவன் அடிக்கடி வயிறு ஒட்டி வீட்டுக்கு வந்தால் அவனுக்குத்தான் என் பரிமாற—வேலைக்காரியைக் கொண்டே பரிமாறும்படி செய்தாற் போகிறது என்று வீட்டுத் தலைவி அகங்காரத்வ சிந்தை கொள்கிறாள். வீடு தேடி வந்த விருந்தினனை அவமதிக்கிறாள். அவனிடம் முகம் கொடுத்துக் கூடப் பேசுவதில்லை. இந்த சாமான்யரின் முன்பு தான் பேசுவது தன் கௌரவத்துக்குத் தாழ்வு என்று எண்ணிக் கொள்கிறாள். வீட்டுக்குப் புதிதாய் வந்த மருமகன் அவ்வீட்டைச் சேர்ந்த வெகு கால உறவினர்களை யெல்லாம் அல்ப புழுக்களாக மதித்து விட்டு, இவர்களெல்லாம் சோற்றுக்குப் பாரமாய் இங்கு ஏன் அடிக்கடி வர வேண்டு மென்றும், தனக்கு எல்லோரும் உட்பட்டு நடக்க வேண்டியவர்களே யென்றும், தனக்கே அந்த வீட்டில் அதிகபாத்தியதை என்றும் அகங்காரப்பட்டு எல்லோரையும் இளப்பமாக நினைத்துக் கொக்கரிக்கின்றான்.

ஃ

முடியாதென்ற பதம் முட்டாள்களது அகராதியிலேதான் காணப்படும்.

சிலர் தங்களிடம் பேசவருபவர்களுடன் பேசுகிறதில்லை. அவர்கள் கேட்கும் வார்த்தைகளுக்குப் பதில் சொல்லாமல் வேறொருவரிடம் பேசத் தலைப்பட்டு அதில் தங்களுக்கு என்னவோ பெருமை முளைத்து விடுவதாகப் பிரமாதப்படுத்திக் கொள்வர். தங்களுக்கு அதிகாரம் இருக்கிறதென்று எவரெவர் மீது வெறுப்பு தோன்றுகிறதோ அவர்களை யெல்லாம் மறுதினமே வேலையிலிருந்து விலக்கித் தங்களின் ஸர்வாதிகாரத்தை ஸ்தாபிக்கப் பார்ப்பார். வேறு சிலர் அழகினால் கர்வம் கொள்வர். மற்றும் சிலர் தங்களின் ஐசுவரியராசிகளால் தங்கட்கு சமம் எவருமில்லையென்று கருதி ஏழைகளை எளனம் செய்து அவமதிப்பர். தமக்கு நற்காலம் இருக்கிறதென்று துணிந்து அச்சிரமங்களிலெல்லாம் தலையிட்டு கொண்டு அடாது புரிந்து கர்வத்தில் ததும்புவர். இவளென்ன, நாம் பார்த்துக் கொண்டு வந்தவள் தானே, வீட்டுப் புழுக்கைக்கு இவ்வளவு ஆணவமாவென்று மாமியாரின் அகங்காரம் ஹிமாசல பர்வதத்தின் உச்சிவரையில் செல்லும். வெந்ததைத் தின்று மூலையில் கிடக்க வேண்டியதை விட்டு இவ்வளவு திமிராவென்று மருகியின் அகங்காரம் வானத்திற்கு அப்பாலும் எட்டிப் பார்க்கும்.

ஃ

தம்மாலே தான் உலகமே சரியாய் நிற்கிறது, இல்லையேல் தலைகீழாய்ப் போய்விடுமென்று நினைக்கும் உன் மத்தர்களும் இருக்கிறார்கள். வேலைக்காரர்களிற் சிலர் தங்களாலே தான் எஜமான் லாபமடைகிறான், இல்லையேல் எஜமான் ஊரை விட்டு ஓடிப் போகவேண்டியது தான் என்றெண்ணி கர்வசிந்தை மிகுகின்றனர். இந்தத் தூர்க்குணம் ஜனித்த க்ஷணம் எஜமானனிடம் அலக்ஷியம் பிறக்கிறது, அவனைக்கண்டால் எழுந்திருக்கும் வழக்கத்தை யொழித்து, அடங்கிப்பேசும் வாடிக்கையை விட்டு, வெகு அலக்ஷிய மாயும் இழிவாயும் எதிர் வசனம் கூறத் தொடங்கி விடுகிறார்கள். அசட்டு எஜமானன் இவ் வேலைக்காரர்களைப் போல் கிடைப்பதரிதென்று அவமரியாதையான வார்த்தைகள் செவியிற் புகுந்து குடைந்தாலும் எருமை மாட்டின் மீது மழை பெய்த மாதிரி கோபம் கொள்ளாமல் மௌனமாயிருந்து விடுகிறான். இவனது ஊமைத்தனத்தைக் கண்டு வேலைக்காரர்களின் வாய் பெரிதாகி நாளுக்கு நாள் அலக்ஷியமான சொற்கள் வளர்ந்து பலரிடம் அவமானம் அடைய நேருகிறது. ஞானியிருக்கும் எஜமான் இப்படியிரான், அலக்ஷியமாய்ப் பேசி அகங்கலிக்கும் வேலைக்காரனை உடனே துறத்தி வேறொருவனை நியமிப்பான்.

உலகம் பெரிது. புத்தி சாலிகள் பலர். ஸரஸ்வதியின் கிருபை அநேகருக்கு உண்டு. யாவரும் கர்வப்படக் காரணம் இல்லை. எந்த நூலாசிரியருக்கும் தமது நூலிலுள்ள பிழைபாடுகள் தமக்குத் தெரியாது. ஒவ்வொருவரும் தம்மையே யுக்தி சாலிகள் என்று மதித்துக் கொள்வதில் பயன் இல்லை. புகழ்ச்சி, நற்பெயர் என்பது வெளியிலிருந்து தமக்கு வரவேண்டும். இவ்வித கர்வசிந்தை இப்போது உண்டானதல்ல, முற்காலத்திலேயே தோன்றி விட்டது. பாரதயுத்தத்தில் அர்ஜுனன் தனது பராக்கிரமத்தை நினைத்து மகிழ்ந்தான். பீமன் தன்னாலேதான் யுத்தம் முடிவாகி ஜயம் கிடைத்ததென்று எண்ணினான்.

---

அண்டை வீட்டுக்காரரையும் உத்தியோகஸ்தரையும்வரவழைத்துவிருந்து செய்தால் அது அன்னதானமாகுமா? தானத்தில் ஜாதி பேதமில்லை.

பின்னர் எல்லோரும் சேர்ந்து ஸாக்ஷியாய்ப் பார்த்துக் கொண்டிருந்த அரவானைக் கேட்டார்கள். அவன் தேஜோமயமான ஒரு சக்கரம் எல்லோருடைய சிரங்களையும் சேதித்துக் கொண்டிருந்தது; இதைத்தான் நான் பார்த்துக்கொண்டிருந்தேன் என்றான். ஸகலரும் வெட்கித்தலை குனிந்தார்கள். ஆகவே நம்மால் ஒரு காரியம் முடிந்ததென்று அகங்கார மடைவது அறிவீனமே யன்றி வேறில்லை.

ஃ

மஹாபலவானான இராவணனின் கர்வசிந்தை இறுதியில் என்னவாயிற்று? மனைவியான தாரை தடுத்தும் தன் தம்பியான சுக்கிரவனுடன் யுத்தத்திற்கு எழுந்த வாலியின் அகங்காரத்வம் யாதாயினது? துரியோதனின் திமிர் பிடித்த தன்மையின் முடிவு என்ன? பாகவதத்தில் கம்ஸனுக்கிருந்த அகங்காரத்தை யாரால் அளவிட்டுரைக்க முடியும்? சத்யபாமாவின் கர்வம் எவ்வாறு ஒடுங்கியது? மகரிஷி தனக்கு அளித்த புஷ்பமாலையை வரப்பிரஸாதம் போல் நினைத்து ஏற்றுக் கொள்ளாமல் யானையின் கழுத்தில் இட்ட இந்திரனின் கர்வசிந்தை எப்படி யழிந்தது? கணவனை எதிர்த்து நின்ற கைகேசிக்கு என்ன பெயர் கிடைத்தது? சூர்ப்பநகையின் கர்வ புத்தி எங்ஙனம் சிதறுண்டது? ஜப்பான் தேசத்தை அலக்ஷியமாக மதித்துப் போருக் கெழுந்த ருஷியாவின் தோல்வி எப்படி? உலக முழுமையும் வெற்றி கொள்ள நினைத்த பிரான்சு சக்கரவர்த்தியான மகாநெப்போலியனின் அந்தியகாலம் எவ்வளவு பரிதாபகரம்? சென்ட்ஹெலினா தீவில் ஏகாங்கியாய்ச் சிறையிற் கிடந்து நெப்போலியன் மடிய நேர்ந்தது எவ்வளவு துக்கம். ஸமீபத்தில் பிரபஞ்ச ஸம்ஹார கர்த்தா போன்றும் எழுந்து மகாயுத்தம் புரிந்த ஜர்மனியின் ஆரவாரத்தினது முடிவை எல்லோரும் அறிவர்.

ஃ

மனிதன் தனக் கென்று கர்வம் பட்டுக் கொள்ள எந்த வகையிலும் அவன் நியாயம் பெற்றிருக்க வில்லை. அவன் செயலால் நடப்பது எதுவுமேயில்லை. கடவுள் பிணிதீர்க்க வைத்தியன் பெயர் பெறுவது போன்ற மாதிரியாகவே தான் எல்லாம். கற்ற கல்வியைப் பற்றிக் கர்வப்படுவதெனிலோ அது தனக்குப் பிறர் இட்டபிச்சையே, திடீரென்று மூளையில் மயக்கமுண்டானால் எல்லா கல்வி ஞானமும் மறைந்து போம். எவ்வளவோ நூல்கள் இயற்றிய கலாவல்லவர்களும் தங்கள் செயலால் ஏதும்முடியவில்லை, அது அந்த சமயத்தில் பகவான் தங்களுக்குத் தந்த புதிய அறிவின் துணையால் முடிந்ததென்கிறார்கள். எண்ணிக்கையற்ற நூல்களை இயற்றிய அவர்களே வேறொருபுதிய நூல் எழுதத் தொடங்குகையில் 'என்ன எழுதுவது' என்று யோசித்தபடி ஏதும் தெரியாமல் திகைக்கிறார்கள். சில தினத்துக்கு நான்கு பக்கமே எழுத வருகிறது; மற்றொரு தினத்தில் ஆறு பக்கம் எழுதி விட்டுப் பிறகு வாசித்துப் பார்க்கும்போது அது தங்கட்கே உகந்ததாயில்லாமல் கிழித் தெறியும் படி நேர்கிறது. வேறொரு நாளில் உட்கார்ந்த வுடன் ஐம்பது பக்கம் மட மட வென்று எழுதி விடுகிறார்கள்; அது எவ்வளவோ நேர்த்தியாகவும் அமைந்து விடுகிறது. இதற்காக

---

ஒரு சிறிய சண்டை நாளுக்குநாள் பகைமை முற்றிப் போக, சண்டையில் சம்பந்தப்பட்டவரில் முக்கியஸ்தர் மரணமடைய, அந்த சாவுக்கும் போகாமல் எதிர் பக்கத்தார் நின்றுவிட, பிறகு விரோதம் பலத்து என்றைக்குமே சோதபடியாய்விடுகிறது. முக்கியஸ்தர் இறந்தபிறகு சேர்ந்துவிடுவதுமுண்டு.

மனிதன் கர்வப்பட நியாய முண்டா? அது அவன் செயலால் முடிந்ததா? "ஆட்டிவைத்தால் ஆடாதார் யாரே" என்று இராமலிங்கஸ்வாமிகள் சொல்லியது போல் நம்மை யெல்லாம் ஆட்டுவிக்கும் பரம்பொருள் ஒன்றுளது. எல்லாம் அதன் செயல் நம்மால் ஆவது ஏதுமில்லை. இராமாயணத்தை இயற்றிய கம்பர் துளி என்பதற்குப் பதிலாகத் 'தும்' என்று பாடி விட, அதற்கு ஒட்டக் கூத்தர் 'தும்' என்ற பதம் துளி என்ற பொருள் படாது என்று ஆக்ஷேபிக்க, கம்பருக்கும் அந்த ஆக்ஷேபம் சரியென்றே மனதிற் பட்டு என் செய்வது என்று கலங்கி, "நானும் அறியேன்—அவனும் பொய்ச் சொல்லாள்" என்று தம்முள் கூறிக்கொண்டு தமது செயலில் இராமாயணம் முடியவில்லை யென்றும், ஸரஸ்வதியின் கடாக்ஷத்தால் நிறை வேறினதற்கு அந்தத் தேவியே இதற்கு சமாதானம் சொல்ல வேண்டு மென்றும் முடிவு செய்தார். அதன் பின்பு ஸரஸ்வதி தோன்றி தும் என்பது வழக்கச் சொல்லில் உண்டு என்று காட்டியதை விநோத ரஸ மஞ்சரி என்ற நூல் விஸ்தாரமாகச் சொல்லும். கல்வியிற் பெரிய கம்பரின் வித்வத்வ நிலையே இவ்வாறாயின் மற்றவரைப் பற்றி என் சொல்வது? இப்படியே ஒவ்வொரு விஷயத்தையும் விஸ்தாரமாக எடுத்துரைத்து அகங்காரப் படுவதற்கு எவருக்கும் உரிமையில்லை யென்பதை நிரூபிக்கலாம். நன்றாகக் கற்றவர்கள் தங்கட்கு ஏதும் தெரியாதென்பதைத் தான் பூர்ணமாக அறிவார்கள்; அறிந்து தாழ்ந்து வணங்கி தங்களின் அடக்கமாகிய குணத்தால் சகல சிறப்புகளையும் எய்தப் பெறுவர். அதுதான் ஸாத்தியமே யன்றி அகங்காரத்வ சிந்தையால் உயர்ந்தோர் எவருமில்லை.

"கற்றது கைம் மண்ணளவு கல்லா துலகளவென்
றுற்ற கலைமடந்தை யேதாகின்றாள்—மெத்த
வெறும்பந் தயங்கூற வேண்டாம் புலவீ
ரெறும்புந்தன் கையாலெண் சாண்"

என்றார் ஔவயார்.

## தெரியாதவன் போல் இருந்து தெளிவுபெறு.

உன் வியாபார ரகசியத்தின் சூட்சுமக் கயிறு தன்னிடம் இருக்கிற தென்றும், தான் நினைத்தால் எந்த நிமிஷத்திலும் உன்னைக் கவிழ்க்க முடியுமென்றும் சொல்வோனிடத்தில், அவன் சொல்லியதை நீ அறியாதவன் போலவே காண்பித்துக்கொண்டு, இனி அப்படி அவன் சொல்ல—எண்ண முடியாதவாறு உன் காரியங்களை ஒழுங்கு படுத்திக்கொள்.

இவ்விதமே, உன்னைப்பற்றிக் கேவலமாய்த் தாங்கள் பேசிய சங்கதிகளை நீ அறியாய் என்று அவர்கள் நம்பும் நம்பிக்கையையும் நீ நெடுக வளர்த்துச் சென்று, ஏதும் அறியாதவன் போலவே உன்னைக் காட்டிக்கொள். ஆனால் நீ அறிந்துகொண்ட வற்றிலிருந்தும் தெளிவு பெற்று, இனி உன்னைப் பற்றிப்பேச எந்த சங்கதியும் அவர்களுக்குக் கிடைக்காதபடி இரகசியத்தில் செய்துகொள்.

# எனது காதலின் ஏமாற்றம்.



நான் திருவனந்தபுரம்மகாராஜா காலேஜில் உபாத்தியாயர் வேலையிலமர்ந்து ஆறுமாதங்களாயின. வேலையில்நுழைந்து சில மாதங்களாவதற்குள் உற்றார் உறவினரைப் பிரிந்து ஊரூராய் அலைந்து அவதிப்படவைத்த அதிகாரியின் எழுதுகோலும் மௌனம் சாதித்தது. அதைக்கண்டு நான் அதிசயித்தேன். என்னோடு வாசித்த என் நண்பன் இரத்தின சபாபதி திருவனந்தபுரத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டர் உத்தியோகத்தில் இருந்ததால் நான் வாசிப்பதற்கு வேறிடம் தேடிச் சென்று அல்லலுறவில்லை. இயற்கையிலேயே விகடமாகப் பேசும் ஆற்றல் வாய்ந்த என் நண்பனோடு வசிக்க நேர்ந்ததால், பட்டணவாசம் எனக்கு ஒருவாறு இன்பமளித்தது. ஆனால் நான் பிறந்த இடமாகிய அழகிய—பாண்டிய புரத்தைப் பற்றிய சிந்தனைகள் அடிக்கடித் தோன்றி என்மன நிம்மதியைக் கலைத்தன.

சபாபதி :—உன் கலியாணத்திற்கு என்னை அழைப்பாயா?

நான் :—என்ன சபாபதி! உன்னை மறப்பதா? ஒரு நாளுமில்லை.

சபாபதி :—கருணாகரா! நான் உன்னிடம் சில விஷயங்களைப் பற்றி பேச வேண்டு மென்றிருந்தேன். இன்று தான் தருணம் வாய்த்தது. நீ அந்தப் பெண்ணை நேசிப்பதுபோல் அவள் உன்னை மனதாரநேசிக்கிறாளா? நேசிக்கின், அது உனக்கு எப்படித் தெரியும்? சாதாரணமாக நம்போன்ற வாலிபர்கள் மடவாரின் மாயவலையில் விழுந்துத் தவிப்பதைநான் அறிவேன் பெண்களின் உள்ளத்தை உள்ளவாறுணராமல் அவர்களிடம் மனதை விட்டுக் கொடுப்பது சுத்த மதியீனம். உலக நிந்தை அஞ்சுவதற்குரியது. முக்கியமாய் இத்தகைய விஷயங்களில் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். மேலும், ஒருவன் தன் இதய உணர்ச்சிகளை நன்கறிய வேண்டும். எச்சரிக்கையின்றி காலை முன்னே வைத்து இருட்டிற் சென்று இடர்ப்படும் போது பச்சாத்தாப மடைபவர் பலர். இம்மாதிரியான வலையில் நீ சிக்குண்டிருக்கிறாயோ என்று சந்தேகித்தே நான் இவ்வளவும் கூறுகிறேன் என்றான்.

இவ்வார்த்தைகளைக் கேட்டு நான் பிரமித்தேன். ஒரு வினாடியில் ஆயிரம் எண்ணங்கள் என் மனதில் எழுந்தன சென்ற கால சம்பவங்கள் சில என் ஞாபகத்துக்கு வந்தன.

ஃ

சாரதையும் நானும் குழந்தைப் பருவமுதல் ஒன்றாய் விளையாடி வளர்ந்தோம் சிறுவயதில் எங்களுக்குள் தோன்றிய சாதாரண அன்பு நாளடைவில் காதலாக மாறியது. சாரதையின் தந்தை மரகத சுந்தரம் பிள்ளை பெருந் தனவந்தர். இயற்கையிலேயே மிகுந்த சிக்கனமும் செட்டு முடையவர். ஆனால் தமது ஏக புத்திரிகாரத்தினமாகிய சாரதையின் கல்வி விஷயத்தில் மட்டும் தாராளமாய்ச் செலவிட்டார். சாரதா தாய் பாஷையாகிய தமிழிலும் தேச பாஷையாகிய ஆங்கிலத்திலும் அதிகத் தேர்ச்சியடைந்திருந்தாள். விடுமுறை காலங்களில் ஊர் போய்ச் சேர்ந்ததும் என் முதல் வேலை லலிதா விலாசத்துக்குச் சென்றுசாரதையைப் பார்ப்பதுதான்.

(தொடரும்)

# " அமிர்த குணபோதினி "

## பிரஜோத்பத்தி வருஷத்திய ஆடி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| | | | | [12-33, சந்திர தரிசனம், தக்ஷிணாயனம். |
| அ-சி | 16 | 1 | வி | பிர 23-38, பூச 42-16, நிஜ ஆஷாட சுத்தம், கடகரவி |
| ம | 17 | 2 | வெ | துவி 16-50, ஆயி 37-24, கரிநாள், கடக கிரிதியாதி. |
| அ-சி | 18 | 3 | ச | திரி 9-50, மக 32-23. |
| சி-அ | 19 | 4 | ஞா | சது 2-54, உப 53-23, பூர 27-33, ஸ்கந்த பஞ்சமி. |
| சி | 20 | கடகம் (5-23) 5 | தி | ஷஷ் 50-9, உத் 23-9, குமார ஷஷ்டி. |
| சி | 21 | 6 | செ | ஸப் 44-42, ஹஸ் 19-21, மித்ர-வைவஸ்வத-ஸப்தமி. |
| சி | 22 | 7 | பு | அஷ் 37-55, சித் 16-14, புதாஷ்டமி. |
| அ-சி | 23 | 8 | வி | நவ 35-55, ஸ்வா 13-54, ஸிம்மாயனம் 49-50. |
| சி | 24 | 9 | வெ | தச 32-41, விசா 12-21, சாக விரதம். [விரதம், கரிநாள். |
| சி | 25 | 10 | ச | ஏகா 30-25, அநு 11-36, ஸர்வ-சயன-ஏகாதசி, கோபத்ம |
| ம-அ | 26 | 11 | ஞா | துவா 28-55, கேட் 11-43, க்ஷீராப்தி பூஜா. |
| சி-உ | 27 | 12 | தி | திர 28-34, மூல 12-45, பிரதோஷம். |
| சி-பி | 28 | 13 | செ | சசி 29-8, பூரா 14-50. [பிரதமயாஜுர்வேதோபாகர்மம். |
| அ-சி | 29 | 14 | பு | ○ 30-53, உரா 18-0, வியாஸபூஜை, கஜேந்திர மோக்ஷம் |
| சி | 30 | 15 | வி | பிர 33-51, ஶ்ரூவ 22-18, நிஜ ஆஷாட பகுளம். |
| சி | 31 | 16 | வெ | துவி 38-3, அவி 27-44, அசூன்யசயன விரதம். |
| அ-ம | 1 | 17 | ச | திரி 43-17, சத 34-20. |
| சி-அ | 2 | 18 | ஞா | சது 49-19, பூட் 41-44 |
| | | | | [காவேரி பெருக்கு. |
| சி | 3 | 19 | தி | பஞ் 55-45, உட் 49-33 |
| சி | 4 | 20 | செ | ஷஷ் 60-0, ரே 57-15, |
| | | | | கரிநாள். |
| ம | ஆகஸ்டு 5 | 21 | பு | ஷஷ் 2-1, அசு 60-0. |
| அ-சி | 6 | 22 | வி | ஸப் 7-52, அசு 4-13. |
| சி | 7 | 23 | வெ | அஷ் 11-42, பர 10-1, ஆடி கிருத்திகை. |
| அ | 8 | 24 | ச | நவ 14-11, கிரு 14-19. |
| சி | 9 | 25 | ஞா | தச 14-40, ரோ 16-17. |
| அ-சி | 10 | 26 | தி | ஏகா 12-58, மிரு 16-22, ஸர்வைகாதசி. |
| ம-சி | 11 | 27 | செ | துவா 9-21, ஆரு 14-31, பிரதோஷம். |
| சி | 12 | 28 | பு | திர 4-4, உப 53-21, புந 11-0, சிவராத்திரி. [னம். |
| அ-சி | 13 | 29 | வி | ● 49-48, பூச 6-7, பீம-ஆடி-அமாவாசை, சேதுஸ்நா |
| ம-சி | 14 | 30 | வெ | பிர 41-37, ஆயி 0-24, உப 53-45, ஶ்ராவணசுத்தம். |
| சி-உ | 15 | 31 | ச | துவி 33-10, பூர 47-49, ஆடிப்பூரம், வள்ளி திருமணம். |
| | 16 | 32 | ஞா | திரி 24-55, உத் 41-45, ஸிம்மரவி 33-13, ஆடி பண் |
| | | | | [டிகை. |

| | | | |
|---|---|---|---|
| ரா | | | |
| | 15உக்கு ராசி. | | ரகு சு |
| | | | புத |
| சனி | | | அ கே |